# DISTRICT HISTORY
# CHINGLEPUT

ஜில்லா சரித்திரம்

# செங்கற்பட்டு


சென்னை ஆர்க்கியலாஜிகல் இலாகா

P. V. ஜகதீச ஐயரால்

எழுதப்பட்டு


சென்னை சட்டசபைத் தலைவர்

கனம் திவான்பகதூர் L. D. சுவாமிக்கண்ணு பிள்ளை

அவர்கள் முகவுரையுடன்

கூடியது


சென்னை :

ஸி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்

1925




[விலை 5 அணா

# AUTHOR'S PREFACE

Love for one's own country and institutions is a virtue highly essential in all its citizens for its prosperity and well-being. Every attempt should be made therefore to cherish and cultivate this virtue by *one and all*. The study of the history of one's own country in general, and one's own district in particular, should perforce bring about the desired result in this direction. Here we may refer to the statement in the *Report of the fifteenth Provincial Educational Conference* of 1923. 'It is

> one of the fundamental principles of pedagogy that the History and Geography to be taught to the young should start with and be based on the study of the History and Geography of the district or region in which the pupil lives and be correlated to his actual daily experience.'

It is the study of the History of our ancient times and ancient rulers that should rouse in our youths a feeling of reverence and esteem for our ancient rulers and their works and institutions.

Our youths, nay our countrymen and countrywomen too, seem to be under the impression that our land, unlike others, cannot boast of a history from the records of our rulers and historians. This is perhaps due to the fact that books on the history of our land put into their hands are those containing materials culled by foreigners. Here we may point out the fact that in our country historical facts and events of ancient days and

ancient rulers have been carefully preserved *imperishably* and *unalterably* in Epigraphical records on temple walls, copper-plate grants and so on.

Our present Government have collected and published in the *Gazetteers* of the districts and the *Reports of the Epigraphical* and *Archæological departments* a good deal of valuable historical information relating to each district, especially of ancient days and ancient rulers. From out of the facts based on these research works, a series of booklets containing summaries of historical events and other particulars of the various districts, is issued in vernaculars, for the use of our school-going boys and girls and this volume is one of them.

The plan adopted in compiling these booklets is that of giving particulars relating to the situation, people etc., of each district in the general introduction, the political history proper from the beginning up to the occupation by the British in chapter I, and the Gazetteer relating to the historically important places in chapter II. In the case of the Madras district alone, the history relating to the acquisition by the English of the various parts of the presidency is given in the introduction, the history of the city together with the founding of Fort St. George in chapter I, and the various institutions useful to the people, maintained by government and by private bodies, in chapter II.

June 23, 1924. P. V. JAGADISA AYYAR.

# FOREWORD

I cannot commend too highly the educational value of this series of *gazetteers* in Tamil. I have been long wishing that the people of every town and village should have ready to hand a complete guide to objects of local interest and particularly to local antiquarian remains; and this series by a competent archæologist like Mr. P. V. Jagadisa Aiyar will go far to fulfil this desideratum.

*Fort St. George,*
19-10-1924.

L. D. SAWMIKANNU.

# பொருளடக்கம்





# செங்கற்பட்டு ஜில்லா

## பூர்வ பீடிகை

### (அமைப்பு முதலிய விவரங்கள்)

செங்கற்பட்டு ஜில்லா சென்னை ராஜதானியின் கிழக்குச் சமுத்திரக்கரையில் அமைந்துள்ளது.(படம் 1). இந்த ஜில்லாவின் கிழக்கில் வங்காளக் குடாக்கடலும், வடக்கில் நெல்லூர் ஜில்லாவின் எல்லையும், மேற்கிலும் தெற்கிலும் வட ஆற்காடு, தென் ஆற்காடு ஜில்லாக்களும் இருக்கின்றன. இந்த ஜில்லாவின் வட பாகத்திலுள்ள சென்னை நகரை மட்டும் தனி ஜில்லாவாக ஏற்படுத்தியிருக்கிறார்கள். இந்த ஜில்லாவுக்குச் செங்கற்பட்டு ஜில்லாவென்று எக்காரணம்பற்றிப் பெயர் வந்ததெனில், செங்கல்பட்டு என்ற ஒரு ஊரைப் பற்றி. அந்த ஊரில் ஜில்லாக் கச்சேரி ஏற்பட்டிருப்பது மன்றி, சப்கலெக்டரின் நிலையான இருப்பிடமாகவும் அமைந்திருப்பதால் அதன் பெயரையே அந்த ஜில்லாவுக்கு இட்டார்கள். அந்த ஊருக்குக் "குவலயபுரி" என்ற இன்னொரு பெயரும் உண்டு. செங்கழுநீர்ப் புஷ்பத்திற்கு "வலயம்" என்று சம்ஸ்கிருதத்தில் பெயர். ஆதலால் குவலயபுரி என்ற பெயரை அதற் கிட்டனர். மேலும் "பட்டு" என்றால் கிராமம் என்று பொருள் தரு மாதலால் செங்கழுநீர்ப் புஷ்பம் ஏராளமாகப் புஷ்

பிக்கும் கிராமம் செங்கல்பட்டு என்று ஏற்பட்டிருக்கலாம். செங்கமலப்பட்டு செங்கற்பட்டென்று மாறியதாகக் கூறு கிருர்கள். அந்தக் கிராமத்திலிருந்து செங்கற்பட்டு ஜில்லா அதன் பெயரை அடைந்தது. இந்தச் செங்கற்பட்டு ஜில்லா இப்பொழுது ஏழு தாலுக்காக்களாகப் பிரிக்கப்பட்டிருக் கிறது. அவையாவன:—

1. சைதாப்பேட்டை
2. செங்கல்பட்டு
3. காஞ்சிபுரம்
4. மதுராந்தகம்
5. ஸ்ரீபெரும்பூதூர்
6. திருவள்ளூர்
7. பொன்னேரி

இயற்கை அமைப்பைப்பற்றிக் கூறுமிடத்து இந்த ஜில்லா ஒரு சமவெளியே. சமுத்திர ஓரத்தில் நிர்ஜனமாயும் மற்றப் பாகம் சில இடங்களில் மேடுபள்ளமாயும், சில இடங்களில் குன்றுகள் அடர்ந்தும் இருக்கிறது. இந்த ஜில்லாவின் அதிகமான நீளம் 115-மைல். அதிகமான அகலம் 42-மைல். இந்த ஜில்லா 3071-சதுர மைல் விஸ்தீர்ணமுள்ளது. இதில் நிலையான 2267 கிராமங்கள் அடங்கியுள்ளனவென்றும் அவைகளில் 643 சரோத்திரியம் ஜமீன்தாரிகளென்றும் கணக்கு ஏற்பட்டிருக்கிறது. 1921-ம் வருஷத்திய ஜனசங்கையின்படி இந்த ஜில்லாவில் 14,93,058 ஜனங்கள் இருக்கிருர்கள்.

இந்த ஜில்லாவில் முக்யமான நதி பாலாறு. அது மைசூர் ஜில்லாவில் உற்பத்தியாகி வடஆற்காடு ஜில்லாவின் வழியாகச்சென்று காஞ்சிபுரத்திற்குக் கொஞ்சதூரம் மேற்கில் இந்த ஜில்லாவில் பிரவேசிக்கிறது. இந்த ஜில்லாவிலுள்ள இதர நதிகள் குசஸ்தலையாறு, ஆரண்ய நதி, கூவம், அடையாறு முதலியன. காக்கிரேன் கால்வாய், (Cochrane canal), கிழக்கரைக் கால்வாய் (East coast canal), என்ற இரண்டு கால்வாய்கள் வெட்டப்பெற்றுள்ளன. இந்தக் கால்வாயின் சொந்தக்காரர் பேஷில் காக்கிரேன் என்ற ஒருவர். ஆனால், 1839-ம் வருஷத்தில் சர்க்காரே அந்தக் கால்வாய்க் கண்டிராக்டருக்கு வருஷவாரி 14,000 ரூபாய் கொடுத்து அதைத் தங்கள் மேற்பார்வையிலேயே வைத்துக்கொண்டார்கள். மேற்கூறிய வருஷவாரிச் செலவு 1847-ம் வருஷம் முதல் நிறுத்தப்பட்டது.

எட்டாம் நூற்றாண்டு வரை இந்த ஜில்லாவின் ஜனங்கள் பல்லவர்களென்றும், பாண்டவர்களென்றும் குறும்பர்களென்றும் கூறப்பட்டு வந்தார்கள். இந்த ஜில்லாவில் அதிக ஜனத்தொகையுள்ள ஜாதி பள்ள ஜாதி. சோழ ராஜாக்களது அதிகாரம் கர்நாடகத்தில் பரவிய பொழுது கன்னடம் பேசும் தற்காலத்திய இடங்களிலிருந்து ஏராளமான ஜனங்கள் வந்து குடியேறினார்கள். அவர்கள் வேளாளர்கள் அல்லது பயிர்செய்பவர்களென அழைக்கப்பட்டார்கள். அச்சமயம் நாட்டில் ஜனத்தொகை குறைந்திருந்ததால் அவர்கள் விவசாயம் செய்வதற்காக அழைத்துவரப் பட்டார்கள்.

இந்த ஜில்லாவிலும் பௌத்தமதச் சின்னங்கள் ஏற்பட்டிருந்ததற்குக் காரணம் ஒரு சமயம் பௌத்த மதம் ஜனங்களுள் ஸ்திரப்பட்டிருந்ததனுலேயே. பௌத்த மதத்திற்குப் பிறகு அதாவது அது க்ஷீணித்த ஏழாம் நூற்றுண்டிற்குப்பிறகு சமணர்கள் எட்டாம் நூற்றுண்டு முதல் பன்னிரண்டாம் நூற்றுண்டு வரை மேன்மைபெற்றுச் சைவ மத அரசர்களிடமிருந்து யாதொரு தொல்லையுமின்றி இருந்து வந்தார்கள். வைஷ்ணவ மதமும் பன்னிரண்டு பதின்மூன்ரும் நூற்றுண்டுகளில் மேன்மைபெற்றிருந்தது. இம்மதங்களின் கொள்கைகளும் சின்னங்களும் தேசத்தில் ஜனங்களுள் அங்கங்கு ஏற்பட்டிருக்கின்றன.

நெசவுத் தொழில் செய்யும் இரண்டு ஜாதியார்கள் இந்த ஜில்லாவில் வந்து தங்கினுர்கள். அவர்கள் பட்டுத் துணி நெய்யும் சாலியர்களும், பருத்தித் துணி நெய்யும் செங்குந்தர் என்ற கைக்கோளர்களுமே. தவிர அடியில் குறித்துள்ள ஜாதியார்களும் இந்த ஜில்லாவில் வசிக்கிருர்கள். (1) வேளாளர், (2) கவரை, (3) கோமுட்டி, (4) சாலியர், (5) கன்னடியர், (6) மறவர், (7) கிராமணி அல்லது சான்ருேர், (8) பள்ளி, (9) செட்டி, (10) கைக்கோளர், (11) கம்மாளர், (12) வாணியர், (13) சக்கிலியர், (14) பள்ளர் முதலானோர்கள்.

இந்த ஜில்லாவில் ஜனங்களின் முக்கிய கைத்தொழில் விவசாயம். சாகுபடிக்குரிய நிலங்கள் மூன்று விதமாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. அவையாவன (1)

நன்செய், (2) புன்செய், (3) தோட்டக்கால். நன்செய் நிலங்களில் பல விதமான நெல் பயிரிடப்படுகின்றது. புன் செய் நிலங்களில் கேழ்வரகு, வரகு, மக்காச்சோளம், கம்பு முதலியன பயிரிடப் படுகின்றன. தோட்டக்கால்களில் வள்ளிக்கிழங்கு, முள்ளங்கி, வெங்காயம், கத்திரி, கொத்தவரை, வெள்ளரி, கோடைப் பூஷணி, பாகல், அவரை, புடல், பீர்க்கு முதலிய பற்பல காய்கறிகள், மிளகாய், புகையிலை, வாழை, எலுமிச்சை, நாரத்தை, முந்திரி, பலா, கொய்யா, முருங்கை, மா முதலியன பயி ரிடப்படுகின்றன. நெல் அறுவடை சேற்றுக்கால் அறு வடையென்றும், புழுதிக்கால் அறுவடை யென்றும் இரு வகைப்படும். கார்நெல், மணக்கட்டை, சம்பா முதலிய நெல்வகைகள் அறுவடை செய்யப்படுவதுமன்றிப், புன்செய் நிலங்களில் வெற்றிலையும் கரும்பும் மேற்கூறியுள்ள தானி யங்களைத் தவிர நிலக்கடலை, காராமணி, சாமை, தினை, உளுந்து, துவரை, எள்ளு, கொள்ளு முதலிய தானியங்க ளும் சாகுபடி செய்யப்படுகின்றன. மேற்கூறியுள்ள விளை பொருள்களைத் தவிர மல்லிகை, முல்லை, சாமந்தி, ஸம்பங்கி, ரோஜா, கொடி ஜம்பங்கி, பன்னீர், அலரி, நந்தியா வட்டை, மரு, மருக்கொழுந்து முதலிய புஷ்பச்செடி கொடி வாசனை இலைகளடங்கிய பூந்தோட்டங்களும் இந்த ஜில்லாவில் உண்டு. சில வருஷங்களுக்குமுன் விவசாய மராமத்து சிறிதும் கவனிக்கப்படாம லிருந்தது. ஆனால், பிளேஸ் (Place) என்ற துரையின் நன்முயற்சியால் இந்தக் குறை ஒருவாறு நிவர்த்திக்கப்பட்டது. விவசா யத்தைத் தவிர, உப்புக் காய்ச்சல், சாராயம் இறக்கல்,

உலோகங்களில் வேலைசெய்தல், காகிதம் செய்தல், துணிகளுக்குச் சாயம் போடல், எண்ணெய் ஆட்டல், அவுரிச் சாயம் முதலிய தொழில்களும் இந்த ஜில்லாவில் உண்டு.

இந்த ஜில்லா செழுமை யற்றது. மணற்பாங்காகவும் மேட்டுப் பூமியாகவும் இராத இடங்களில் பாறைகள் மேலாக இருப்பதால் பயிர்செய்யப் பெரிய இடையூறு யிருக்கக் காணலாம். இந்தப் பெரிய ஜில்லாவின் ஒரு சிறிய பாகம் மேற்கூறிய இடையூறுகள் யாதுமே ஏற்பட்டிராவிடினும் மற்ற ஜில்லாக்கள் போன்ற செழுமையை அடைந்திருக்கவில்லை. செட்டில்மெண்டார் (Settlement) இந்த ஜில்லாவின் பூமியை நான்கு தர நிலங்களாகப் பிரித்துத் தீர்வையிட்டிருக்கிறார்கள். அவையாவன:—(1) ஸ்திரமாக விருத்தி செய்யப்பட்டிருக்கும் நிலம், (2) வண்டல் பூமி, (3) செம்மண் பூமி, (4) மணல்வெளி. இவைகளில் மணல்வெளியே பெரும்பாகம். சிற்சில விதக் களிமண்ணும், ஜல்லி மண்ணும், கருங்கல்லும் அகப்படுவதைத் தவிர இந்த ஜில்லாவில் யாதொரு உலோகமே அகப்படுவதில்லை. செங்கல்பட்டுக்குச் சுமார் மூன்று மைல் தூரத்திலுள்ள களத்தூரில் முற்காலத்தில் பொன் அகப்பட்டதாம். ஆனது பற்றியே அவ்வூருக்குப் பொன்விளைந்த களத்தூரெனப் பெயரும் உண்டு. ஆனால் இப்பொழுது அங்கே பொன்னைக் காணோம். சட்டிபானைகளுக்கு மெருகேற்றக்கூடிய ஒருவகைக் குருந்தக்கல் செங்கல்பட்டைச் சுற்றியுள்ள குன்றுகளில் அகப்படுகின்றன. தவிர ஒரு வித அருமையான சிலைக்கல்லும் இங்கே அபூர்வமாக அகப்பட்டு ஐரோப்பாவுக்கு அனுப்பப்படுகின்றது.

இந்த ஜில்லாவின் அருகிலுள்ள கடலில் எக்காலத்தி லும் அகப்படக்கூடிய மீன்களைத் தவிரச் சிற்சில காலங்களில் சிலவகை மீன்களும் அகப்படுகின்றன. அவைகளைப் பிடிப்பவர்கள் ரோமன் கத்தோலிக் கிறிஸ்தவ மதத்தைத் தழுவியுள்ள 10,000-க்கு மேற்பட்ட ஜனங்கள். அவர்கள் சமுத்திரக்கரை முழுவதிலுமே பரவி யிருக்கிறார்கள். அவர்கள் பாய்களுடன் கூடிய கட்டுமரங்க ளில் ஏறிச்சென்று ஆழ்ந்த கடலில் தூண்டிகள் போட்டும், மற்ற இடங்களில் வலைகள் வீசியும் மீன் பிடிக்கிறார்கள். மீன்களை உப்பிட்டு வற்ற லாக்குமாறு சர்க்கார் அவர் களுக்குக் குறைந்த விலைக்கு உப்புக் கொடுத்தும், மீன் களை உப்பிட்டுக் காயவைக்க இடங்கள் ஏற்படுத்திக் கொடுத்தும் உதவிபுரியச் சிலநாட்களுக்கு முன் ஏற்பாடு செய்திருக்கிறது. கடல் மீன்கள் தவிரச் சுத்த ஜலத்திலுள்ள மீன்களும் அகப்படுகின்றன.

இங்கு அகப்படும் பிராணிகள் சாதாரணமாக இதர தெற்கு ஜில்லாக்களில் காணப்படும் பிராணிகளைத் தவிர வேறில்லை. பெரிய காட்டு மிருகங்கள் அபூர்வம். மாமிசத் தைத் தின்று ஜீவிக்கும் பிராணிகளில் இந்த ஜில்லாவில் காணப்படுவன புலி, சிறுத்தை, கழுதைப் புலி, கரடி, ஓநாய், பெருநரி, குள்ளநரி, மரநாய், கீரிப்பிள்ளை முதலியன. மதுராந்தகம் தாலுக்காவின் தென்மேற்கு பாகத்தில் சில ஜாதி மான்கள் காணப்படுகின்றன. திரு வள்ளூர்த் தாலுக்காவில் சத்தியவேடு பகுதியில் புள்ளி மானும்,கிருஷ்ண மிருகமும் அபூர்வமாகக் காணப்படுகின் றன. மேற்கூறப்பட்டுள்ள பிராணிகளைத் தவிர முயல்,

முள்ளம்பன்றி, சாம்பல் நிற அணில், எலி, சுண்டெலி, பெருச்சாளி முதலிய பிராணிகளும் இருக்கின்றன. மதுராந்தகம், திருவள்ளூர் தாலுக்காக்களில் காட்டுப் பன்றிகள் அபூர்வமாய் அகப்படுவ துண்டு. சாதாரணமான சாம்பல் நிறமான குறங்குகளும் இருவகை வௌவால்களும் தென்படுவதுடன் சத்தியவேடு குன்றுகளில் ஒரு பெரிய ஜாதிக் கருங் குரங்குகளும் இருக்கின்றன. சாதாரணமாகத் தமிழ் ஜில்லாக்களில் காணப்படும் பறவைகளே இந்த ஜில்லாவிலும் காணப்படுகின்றன.

ஊரும் பிராணிகள் பல. அவைகளுள் நாகப்பாம்பு முக்கியமானது. கருநாகம் முதலிய விஷப்பாம்புகளும், இன்னும் பல விஷமற்ற பாம்புகளும் மிகுதி. குளம் குட்டை மடுக்களில் முதலே, தவளை முதலியவைகளும், மரஞ்செடிகளில் பல்லி, தேரை முதலியவைகளும் ஏராளம். அநேக வித பூச்சிகளும் இந்த ஜில்லாவில் உண்டு. சில நாட்களுக்கு முன் கொடிய விஷமுள்ள பாம்புகளை நிர்மூலமாக்கி விடச் செய்த ஏற்பாட்டை அதற்குரிய பணச்செலவை உத்தேசித்து நிறுத்திவிட்டார்கள். முதலே சிறுத்தைகளால் கால் நடைகள் சேதமாவ துண்டு. ஒரு சிறுத்தையைச் சுட்டுக் கொன்றால் அதற்கு சர்க்காரிடமிருந்து முப்பத்தைந்து ரூபாய் வரை வெகுமதி பெறலாம்.

இந்த ஜில்லாவின் மரஞ் செடி கொடிகள் இதர தென் ஜில்லாக்களில் காணப்படும் செடி கொடி மரங்களே. ஆல்மரம், புளியமரம், வேப்பமரம், மாமரம்,

தென்னமரம், பனைமரம், பூவரச மரம், மூங்கில், கருவேல மரம் முதலிய மரங்கள் ஒவ்வொரு கிராமத்திலும் உண்டு. உயர்ந்து வளராத செடிகளடர்ந்த காடுகளிலும் வேலிகளிலும் ஐரோப்பியர்களுக்குத் தெரியாத, ஆனால் இந்நாட்டிலுள்ளவர்களுக்குத் தெரிந்தபற்பல ஔஷதிகள் (மருந்துச் செடிகள்) அகப்படுகின்றன. திருவள்ளூர்த் தாலுகாவில் நாகலாபுரம், காம்பாகம் குன்றுகளின் சரிவுகளில் பல கிராமங்களில்தான் இயற்கையாக மரங்கள் வளர்ந்துள்ள காடுகள் உண்டு. இக்காடுகளில் பெரும்பாகம் கடுக்காய் மரம், செம்மரம், புன்னை மரம், பலா மரம், மாமரம் முதலிய மரங்கள் அடங்கியுள்ளன. சில மரங்கள் கட்டிடங்கள் கட்ட உபயோகப்படக் கூடியவைகள். மேற்கூறிய காடுகளின் விஸ்தீரணம் சுமார் 30 சதுரமைல் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. இப்பொழுது சவுக்கு மரம், கொடுக்காப்புளி முதலியன வைத்துப் பயிர் செய்ய வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. ஏனெனில் இத்தகைய மரங்கள் சீக்கிரத்தில் வளர்ந்து பயன்தரக் கூடியவை.

இந்த ஜில்லாவின் சீதோஷ்ண நிலைமை மிதமானதே. இதர இடங்களில் ஏற்படும் அதிக உஷ்ணம், அல்லது அதிகக் குளிர் இங்கு ஏற்படுவதில்லை. இரு வித பருவக் காற்றுகளின் அனுகூலமும் இந்த ஜில்லாவுக்கு உண்டு. அக்டோபர் மாதத்தின் மத்தியிலிருந்து பிப்பிரவரி மாதத்தின் மத்தி வரை வடகீழ்க் காற்று இங்கு வீசும். பிறகு அக்காற்று தென்கிழக்குக் காற்று அல்லது தென்றல் காற்றாக மாறி, மேமாதம் பாதி நாள் வரை வீசிக்கொண்டிருக்கும்.

அது முதல் உஷ்ணமான காற்று ஆரம்பித்து வீச அது சமுத்திர இளங்காற்றால் நிகமமாக்கப்படுகிறது. இந்த சமுத்திர இளங்காற்று சாதாரணமாய்ப் பகலில் பன்னிரண்டு மணிக்குமேல் ஆரம்பமாகி அஸ்தமித்துப் பத்துமணி நேரம் வரை வீசிக்கொண்டிருக்கும். மேற்கூறிய நிலக்காற்று மேற்குத் தென்மேற்காக செப்டம்பர் மாதம் வரை வீசிக்கொண்டு வருகிறது. அதுமுதல் தென்கிழக்குப் பருவக் காற்று ஆரம்பமாகும் வரை, மெதுவான, ஆனால் மாறுதலுடன்கூடிய இளங்காற்று தென்மேற்கிலிருந்து தென்கிழக்காகச் சிற்சில நேரங்களில் தவிர மற்றக் காலங்களில் வீசிக்கொண்டிருக்கும்.

சென்னையிலும் அதைச் சுற்றியுள்ள செங்கல்பட்டு ஜில்லாவிலும் புயல்காற்றடிப்பது சகஜம். அக் காற்றடிக்கும் காலம் மே மாத ஆரம்பம் அல்லது அக்டோபர் மாதமாகும். அது வங்காளக் குடாக்கடலில் ஆரம்பித்துச் சாதாரணமாகச் சென்னையை அணுகி வீசிக்கொண்டு வருவது இயல்பு. அச்சுழல் காற்றின் நடுவேகம் சென்னையில் தாக்கும். அது தெற்குத் தென்கிழக்காக வீசிக்கொண்டுவந்து தாக்கிப் பிறகு மேற்கு அல்லது மேற்குத் தென்மேற்குத் திசைக்கு மாறிவிடும். இக் காற்று சென்னைக்கு நூறு மைல்களுக் கப்பால் வடக்கிலும் நூற்றிருபது மைல்களுக் கப்பால் தெற்கிலும் போவதில்லை. இந்தச் சுழல்காற்று எல்லாச் சுழல்காற்றுகளைப் போலவே அப்பிரதக்ஷணமாய் நூற்றிருபது மைல் விசாலத்துடன் சுற்றிச் சுற்றி யடிக்கும். இப்புயல் காற்றின் மத்தியபாகம்

நேராகச் சென்னையை நோக்கி அடித்துக்கொண்டு வரும் பொழுது காற்று மிகவும் உக்கிரமாக வடக்கிலிருந்து வீச ஆரம்பித்து இரண்டு மணி முதல் நாலு மணி நேரங்கூட இருந்து கொண்டிருக்கும். பிறகு இக்காற்று சட்டென நின்றுவிட ஒரு அரைமணி சுமாருக்குப் பயங்கரமான அமைதி ஒன்று ஏற்படுகிறது. ஆனால் உடனே எதிர்ப் பக்கத்திலிருந்து புயல்காற்று புதிதாக அடிக்க ஆரம்பித்து முன்போலவே அதிக உக்கிரத்துடன் வீசும். மேற் கூறிய புயல்காற்று வெகுகாலம் தொடங்கிக் கப்பல்களை உடைத்தும், உயிர்ச்சேதம் செய்தும், வீடுகளை வீழ்த்தியும், ஏரி குளங்களின் கரைகளை உடைத்தும் நாசப்படுத்துவது வழக்கம்.

இந்த ஜில்லாவில் போக்குவரவுக்குச் சாதகமாக 573 மைல் ஜல்லிபோட்ட ரஸ்தாவும், 90 மைல் கால்வாயும் ஏற்பட்டிருப்பதுடன் தென் இந்தியா கம்பெனியின் இரண்டு இருப்புப்பாதைகளும் இருக்கின்றன. ஒரு சிறிய கிளை $13\frac{3}{4}$ மைல் நீளமுள்ளது. காஞ்சிபுரத்தையும் ஆற்கோணத்தையும் சேர்க்கிறது. மேற்கூறியுள்ள இருப்புப் பாதையில் ஒன்பது மைல் காஞ்சிபுரம் தாலுக்காவின் மேல்பாகத்தின் வழியாகச் செல்கிறது. சென்னையிலிருந்து தெற்கு நோக்கிக் கூடலூர் வழியாகச் செல்லும் இன்னொரு இருப்புப்பாதை 65 மைல் தூரம் இந்த ஜில்லாவின் மூலமாய்த்தான் செல்கிறது.

சர்க்கார் தீர்வையை உத்தேசித்து நன்செய் நிலங்கள் 16 தரங்களாகப் பிரிக்கப்பட்டு, சென்ற பத்து வருஷ

காலத்தில் தானியம் விற்கப்பட்டு வந்ததை அநுசரித்து நிலக்காரர்கள் சர்க்காருக்கு இவ்வளவு ரூபாய் வரிகட்ட வேண்டியதென்று நிர்ணயிக்கப்பட்டது. ஆனால் புன்செய் நிலங்களின்மேல் தீர்வை வேறு விதமாக விதிக்கப்பட வேண்டியிருந்தது. ஏனெனில் பற்பல புன்செய் நிலங்களில் பற்பல விதமான தானியங்களின் மாசூல் ஏற்பட்ட படியால் நிலக்காரர்களது வருஷத்திய வருமானம் இவ்வளவு தான் என்று நிர்ணயிக்க முடியவில்லை. தவிரவும் காலா காலங்களில் மழை முதலியன ஏற்படாவிட்டால் புன்செய் யில் பயிர் கிடையாது. ஆதலால் ஒவ்வொரு நிலத்திலும் பயிர் செய்யக்கூடிய தானியங்களையும் அவைகளின் கிரயங்களையும் ஒட்டிச் சர்க்கார்வரி இவ்வளவென்று நிர்ணயிக்கப்பட்டுளது.

1794-ம் வருஷத்தில் லார்ட் ஹோபர்ட் (Lord Hobart) சென்னை கவர்னராக வந்தபொழுது, இந்த ஜாகீர் ஜில்லா லையோநல் பிளேஸ் (Lionel Place) என்ற கலெக்டரின் ஆட்சியின்கீழ் ஏற்பட்டது. அவர் காலத்தில் ஜனங்களுக்குள் அடிக்கடி ஏற்படும் கக்ஷிப் பிரதி கக்ஷிகளால் உண்டாகும் கேடுகளை நிவர்த்தி செய்ய முயற்சி ஏற்பட்டது. தவிர 1780-ம் வருஷத்திய சண்டை முடிந்ததும் நிலக்காரர்களிற் பலர் சோற்றுக்கு வழியின்றித் தங்கள் நிலங்களை அற்ப விலைக்கு விற்றுவிட நேர்ந்தது. அப்படி விற்றும் அவர்களுக்கு ஒரு மாதச் செலவிற்குக் கூடப் போதவில்லை. பிறகு நிலங்களை விற்றவர்கள் அவைகளை வாங்கினவர்களின் கீழ்ப்பயிர் செய்து கஷ்டப்பட்டதைப் பிளேஸ் துரை அகற்ற மிகவும்

பாடுபட்டார். அதனுடன் இணையில் அவர் கிராமமணியகாரர், கர்ணம், தலையாரி முதலியவர்களுடைய சம்பளத்தை இவ்வளவென்று நிர்ணயித்து ஆட்சியை ஒழுங்கு செய்ய அதிக சிரமமெடுத்துக் கொண்டார்.

கவர்ன்மெண்டாரால் நியமிக்கப்பட்ட கலெக்டரே ஜில்லா அதிகாரி. சப்கலெக்டர், அஸிஸ்டெண்ட் கலெக்டர், டெப்டி கலெக்டர் முதலானோர் அவருக்குக் கீழ்ப்பட்டவர்களே. கலெக்டரே போலீஸ் இலாகாவிற்குத் தலைவர். சப் கலெக்டர் ஆதீனத்தில் இருப்பவை மதுராந்தகம், செங்கல்பட்டு, காஞ்சிபுரம் தாலுக்காக்கள். ஒரு தாலுக்காவின் ரிவினியூ, மாஜிஸ்டிரேட் வேலையை நடத்துவது அஸிஸ்டெண்டு கலெக்டர். தாலூகாவுக்கு ஒரு தாசில்தார் வீதம் இந்த ஜில்லாவில் 7 தாசில்தார்கள் இருக்கிறார்கள், மேற்கூறிய தாசில்தார்களுக்கு உதவிபுரிய பல டெப்டி தாசில்தார்களும் ஏற்பட்டுள்ளார்கள்.

ஜில்லா கலெக்டரும, சப்கலெக்டரும் முதல் வகுப்பு மாஜிஸ்டிரேட்டுகள். அஸிஸ்டெண்ட் கலெக்டர் முதல் கிளாஸ் மாஜிஸ்டிரேட்டாக இருக்கினு மிருக்கலாம். அல்லது இரண்டாவது கிளாஸ் மாஜிஸ்டிரேட்டாக இருக்கலாம். ஜெனரல் டெப்டி கலெக்டர் ஒரு முதல் வகுப்பு மாஜிஸ்டிரேட். தாசில்தார்கள் முதல், இரண்டாவது, மூன்றாவது வகுப்பென்றும் டெபுட்டி தாசில்தார்களும் ஏற்பட்டிருக்கிறார்கள். போலீஸ் அதிகாரம் ஒரு சூபரின்டெண்டண்ட் கீழ் உள்ளது. அவருக்குக்கீழ்ச் சில அஸிஸ்டண்டு, டிப்டி சூப்பரிண்டண்டுகள், இன்ஸ்பெக்டர்களிருக்

கிறார்கள். பெருத்த குற்றங்களை விசாரணை செய்யவேண்டியவர் ஜில்லா ஸெஷன்ஸ் ஜட்ஜ் என்ற அதிகாரி. அவருக்கு ஸிவில், கிரிமினல் இரண்டு விசாரணைகளையும் செய்யும் அதிகாரம் உண்டு. அவருக்குக் கீழே ஜில்லா முனிசிப்புகள் நியாயம் செலுத்திவருகிறார்கள். மிகவும் தாழ்ந்த ஸிவில் கிரிமினல் கேசுகள் கிராம முனிசிப்புகளால் விசாரித்துத் தீர்மானிக்கப்படும். மராமத்து இலாகா மிக்க மாறுதலை அடைந்திருக்கிறது. ஒரு ஜில்லா எஞ்சினியரும் அவர் கீழ் சப் எஞ்சினியர்களும் இருக்கிறார்கள். இவர்களைத் தவிர அநேகம் தாலூகா ஓவர்ஸியர்களும் சப் ஓவர்ஸியர்களும் இருக்கிறார்கள். இந்த இலாகா இப்பொழுது ரெவினியூ லோகல் என்ற இரண்டு பிரிவுள்ளது. ரெவினியூ இலாகாவின் வேலை, விவசாய சம்பந்தமான பாலம், ஏரி, குளம் கால்வாய் முதலியவைகளையும் உப்பளங்களையும் பொதுக்கட்டிடம் முதலியவைகளையும் கவனித்தல். லோக்கல் இலாகாவின் வேலை ரஸ்தாக்கள் பழுது பார்ப்பது, பாலங்கள் ஆஸ்பத்திரிகள் முதலியவைகளைக் கவனிப்பது முதலியன. இந்த ஜில்லாவுக்கு ஒரு சிவில் ஸர்ஜனும், ஒரு அஸிஸ்டெண்டு ஸர்ஜனும், கீழ்த்தர வைத்திய இலாகா உத்தியோகஸ்தர்களும், அம்மை குத்தும் சூப்பரிண்டெண்டுகளும் சில அம்மை குத்துபவர்களும் உண்டு. வித்தியா இலாகா ஜில்லா இன்ஸ்பெக்டரும் கீழ்த்தர இன்ஸ்பெக்டர்களும் இருக்கிறார்கள்.

---

# அத்தியாயம் 1

## தேச சரித்திரம்

இந்த ஜில்லாவில் ஆதியி லிருந்ததாகக் கூறப்படும் பறையர்களையும், காட்டு ஜாதியர்களையும் பற்றி நமக்கு ஒன்றுமே தெரியாது. நமக்குத் தெரிந்தவர்கள் திராவிடர்கள். இந்த திராவிடர்களைப்பற்றி ராமாயணத்தில் பிரஸ்தாபம் வருகிறது. அயோத்தியை ஆண்ட சூரிய வமிசத்தரசராகிய தசரதரது புதல்வன் ஸ்ரீராமன் ராவணனது ஆட்சியின்கீ ழிருந்த லங்கையையும் திராவிடத்தையும் படையெடுத்ததாக அதில் கூறப்பட்டுள்ளது. மேற்கூறியுள்ள ராமாயண சம்பவம் அதிக புராதன மானது.

அக்காலத்தில் இந்த ஜில்லா தண்டகாரணியத்தின் ஒரு பகுதியாயிருந்தது. தண்டகன் என்ற ஒரு அசுரனது வாஸஸ்தலமாக விருந்தது பற்றி அப்பெயர் ஏற்பட்டது. அப்பொழுது தண்டகாரணியமா யிருந்த இந்த ஜில்லாவில் வசித்தவர்கள் பல்லவர்கள் என்றும், பள்ளிகள் என்றும், குரும்பர்கள் என்றும், வன்னியர்கள் என்றும் பெயர் வாய்ந்திருந்த ஜாதியார்கள்.

பல்லவ அரசர்கள் தங்களது ராஜ்யத்தின் காவல் துறையாக இந்த ஜில்லாவை அநேக நூற்றாண்டுகளாக ஏற்படுத்தி வைத்துக்கொண்டிருந்தார்கள். முதலாவது புலிகேசியின் சிலா லிகிதங்கள் ஒன்றில் காஞ்சிபுரம் படையெடுத்துக் கொள்ளையிடப்பட்டதாகக் கூறப்பட்டிருக்கிறது. எப்படியிருக்கினும் மஹாபலிபுரத்திலுள்ள ஒற்

றைக் கல் சிலைகளும், இன்னும் பற்பல விகிதங்களும் அப்பல்லவர்களின் வேலைகளே என்பதில் ஆக்ஷேப மில்லை.

நமக்குக் கிடைத்துள்ள இப்பண்டைக்காலத்திய சரித்திர சேஷமெல்லாம் கூடி இச்சனங்கள் நாட்டைக் கோட்டம் அல்லது ஜில்லாக்கள் என்றும், நாடு அல்லது சிறு ஜில்லாக்கள் என்றும், நத்தம் அல்லது ஊர்கள் என்றும் பிரித்தார்கள் என்பதே. அவர்களது மண் கோட்டைகளில் ஒன்று ஆட்சிசெய்துவந்த விஸ்தீரணம் பற்றிக் கோட்டம் என்ற பெயர் ஏற்பட்டிருக்கவேண்டும். அவர்களது ராஜியம் இந்த ஜில்லாவின் எல்லைக்கப்பாலும் வட ஆற்காடு ஜில்லாவில் பரவியிருந்தது. முந்திய கோட்டங்களில் 14. இந்த செங்கல்பட்டு ஜில்லாவிலும் பாக்கி வட ஆற்காடு ஜில்லாவிலும் ஏற்பட்டிருந்த விஷயம் தெளிவாக ஏற்பட்டுளது. ஏற்பட்டுள்ள சிலா லிகிதங்களிலிருந்து இப்பல்லவர்கள் மஹாபலிபுரத்தில் காணப்படும் சில கல் வேலைகளுக்குக் காரணபூதர்களென்பது தெரிகிறது. ஒருவருக்கொருவர் கீழ்ப்பட்டிராத பல தலைவர்களின் ஆட்சிகளின் கீழ் இவர்கள் இருந்திருக்கவேண்டும். சில சந்தர்ப்பங்களில் அவர்கள் பிரேதங்களை தகனம் செய்து, சாம்பலை ஒரு பானையில் வாரியெடுத்து, அத்துடன் இறந்தவர்களது ஞாபகக்குறிகளாக ஏற்பட்டிருப்பவைகளையும் போட்டு, பூமியின்கீழ் ஒரு கல்லறையில் புதைத்து, அதைசசுற்றிக் குண்டுக்கற்களைக்கொண்டு வட்டம் வட்டமாக வரம்புகள் ஏற்படுத்திக்கொள்வார்கள். சில வேளைகளில் அவர்கள் பிரேதங்களைக் களிமண்ணினால் செய்து

சுட்ட சவப்பெட்டி போன்ற தொட்டிகளில் அடக்கம் செய்து புதைத்து விடுவதும் உண்டு. இவைகளில் பலவற்றைச் சென்னை மியூசியத்தில் (Museum) பார்க்கலாம். பௌத்த மதமும், ஆரியமதத்தின் பரிசுத்தமான பாகங்களும் மாதிரிகளும் அவர்களுக்குத் தெரிந்திருந்தது. பிறகு அவர்கள் சமணர்களின் கொள்கைகளையும் அநுசரிக்கத் தலைப்பட்டார்கள். இப்புராதன ஜனங்களைப்பற்றி நமக்குத் தெரிந்துள்ளது இவ்வளவே.

பிறகு எட்டாவது நூற்றாண்டில் இந்நாடு குலோத்துங்க சோழனது மகனால் ஜெயிக்கப்பட்டது. மேற்கூறிய கால நிர்ணயம் சோழன் என்ற ஒருவனது பெயரை வேறொருவனது என்று தப்பாகக் கொண்டதிலிருந்து பேதமாகக் கூறப்பட்டுளது. சோழ ராஜ்ஜியத்தின் அக்காலத்திய தலைமை நகரம் கங்கைகொண்டசோழபுரம். அது காவிரி யாற்றின் வட கரையில் அமைந்துளது. சோழ ஆட்சியின் முதல் முதலான செய்கை குரும்பர்களின் கையைக் குறைத்தது. பிறகு அது இருநூறு வருஷங்களுக்குக் குள்ளேயே தெலிங்கணாவில் (Telingana) ஒப்பற்று ஓங்கியதுமன்றித் தென்இந்தியா முழுவதிலும் விந்தியமலை வரை கூடப் பரவி உன்னதமான நிலைமைக்கு வரக்கூடியதாயிற்று. குரும்பர்களது தொகைக் குறைவுக்குக் காரணம் பின்வருமாறு கூறப்பட்டுளது. முன் ஒருவர் கீழுமே இருந்திராத பலதலைமுறை சோழஅரசர்கள் இருந்தார்கள். அவர்களுள் கடைசியான குலோத்துங்க சோழனுக்கு ஒரே பெண்ணும் ஒரே

பிள்ளையுமிருந்தன அக்குலோத்துங்கன் கவிச்சிரேஷ்டனை கம்பனது மகனைக் கொன்றுவிட்டான். அதனால் கோப மூண்ட கம்பனும் அவ்வரசனது மகனைக் கொன்றுவிட்டான். பிறகு குலோத்துங்க சோழனுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு ஒரு ராஜ்யத்தை எவ்வாறு அளிப்பதென்ற ஆலோசனை ஏற்பட்டது. வடக்கே குரும்பர்கள் இருபத்துநான்கு கோட்டைகள் கட்டிக் கொண்டு வசித்துவந்த நாட்டின்மீது அரசனது மனம் சென்றது. ஆதலால் அவனும் அக் குரும்பர்களுடன் சண்டை தொடுத்தான். ஆனால் அவனால் அவர்களை ஜெயிக்க முடியவில்லை. பிறகு ஆதொண்டை என்ற அரசனுக்குப் பிறந்த வீரன்தான் அக் குரும்பர்களை எதிர்த்து அந்த ஜனங்களை அனேகமாக நசித்துப்போகும்படி செய்து அவர்களது நாட்டைக் கைக்கொண்டான். பிறகு குலோத்துங்கனும் வந்து அங்கிருந்த காடுகளை அழித்துப் பெயர் பெற்ற காஞ்சிபுரம் என்ற நகரத்தைப் பிரபலம் செய்தான். அங்கு அவன் பல தேவாலயங்களைப் புதுப்பித்ததுமன்றிப் பாலாற்றின் அருகில் அந்நதியின் ஜலம் ஓடும்படி ஒரு கால்வாயும் வெட்டி வைத்தான். அந்த நகரத்தில் பிரஜைகள் அதிகமிராததால் குலோத்துங்கன் தன் மந்திரியிடம் ஏராளமான பொருள் கொடுத்து அயல்நாடுகளுக்கு அனுப்பிப் பற்பலவிடங்களிலிருந்து குடிகளைக்கொண்டுவந்து நிரப்பி ஜாதிக்கிரமத்தில் அவர்களைக் கலியாணம் செய்து கொள்ளும்படி செய்து குடும்பங்களை ஏற்பாடு செய்தான். நிந்தைப் பெயராக ஜெயிக்கப்பட்ட அந்நாட்டிற்குத் தொண்ட மண்டலம் என்ற பெயர்

கொடுக்கும்படி மந்திரி ஏற்பாடு செய்தான் தொண்டை மண்டலம் என்றால் அடிமைகள் இருக்கும் நாடென்று அருத்தம் கொள்ளும்படி மந்திரி அப்பெயரை இட நினைத்தான்.

ஆனால் தனது அமைச்சனுடைய கருத்தை அறியாத அரசனும் அதற்கு அவன் கூறிய பெயரையே இட்டு அதை ஆதொண்டைக்குக் கொடுக்க அவனுக்கு அங்கு மகுடாபிஷேகம் செய்யப்பட்டது. ஒருவருக்கும் அடங்காத மூர்க்க சுபாவம் பொருந்திய குரும்பர்களை ஜெயித்து வெற்றி பெற்றதி னிமித்தம் அந்த ஆதொண்டைக்குச் சக்கரவர்த்தி யென்ற பட்டமும் ஏற்பட்டது. பிறகு குரும்பர் நாடென்ற நாமதேயமே போய்விட்டது.

ஆளும் அரசனது நெருங்கிய பந்துக்கள்தான் ராஜப் பிரதிநிதியாக விருந்து பற்பல கோட்டங்களை ஆண்டு வந்தார்கள். அவர்களுக்கு ராஜன் அல்லது அரசன் என்ற பட்டமும் உண்டு. சிற்சில சமயங்களில் அவர்கள் வமிசத்தினுடைய பெயரையே தரித்துக்கொள்வதும் உண்டு. உதாரணமாக, அப்படி ஆண்டவர்கள் தொண்டீர சோழன், விக்கிரம தேவசோழன் முதலான பெயர்களும் கொண்டிருந்திருக்கிறார்கள்.

தொண்டை மண்டலத்தைப்பற்றி ஔவையார் பாடியதாவது:—

“வேழ முடைத்து மலைநாடு மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்து—பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்து தெண்ணீர்வயற் றொண்டை
நன்னாடு சான்றோ ருடைத்து.”

கம்பர் இந்நாட்டெல்லையைக் குறிப்பிட்டிருப்பதாவது:—

"மேற்குப் பவளமலை வேங்கட நேர்வடக்காம்
ஆர்க்கு முவரி பணிகிழக்குப்—பார்க்குளுயர்
தெற்கு பினாகி திகழிருப தின் காதம்
நற்றொண்டை நாடெனவே நாட்டு"

நாடுகளை ஆளும் அதிகாரிக்கு நாடான் என்றபெயர். நத்தம் அல்லது நகரஆட்சியைப்பற்றியோவெனில், தென் இந்தியாவின் மாதிரிக்கும், வட இந்தியாவின் மாதிரிக்கும் அதிக வித்தியாசம் ஏற்பட்டிருப்பது புலப்படும். வடஇந்தியாவில் நகர ஆட்சிசெய்யும் அதிகாரி அவனது அரசனுக்கு உத்தரவாதம் சொல்லக் கடமைப்பட்டிருப்பான். ஆனால் தொண்டமண்டலத்திலோ அது ஒரு குடியரசுபோன்று பிரஜைகளாலேயே நிர்வகிக்கப்பட்டுவந்தது.

பன்னிரண்டாவது நூற்றாண்டில் சோழ ராஜ்ஜியம் வடக்கில் குறைந்துவிட்டது. ஆதலால் இந்த ஜில்லாவும் அதன் வடராஜதானியாக ஏற்பட்டு, இதன் தலைமை நகரமும் காவிரிக்கரையில் அமைக்கப்பட்டுத் தொண்டீர சோழனால் ஆண்டுவரப்பட்டது.

சோழ ராஜ்ஜியம் வடக்கில் குறைவு பட்டதற்குக் காரணம் மத விஷயமாக வடக்கிலிருந்து ஏற்பட்ட படையெழுச்சியே. ஏனெனில் அச்சமயம் சைவ மதம், பௌத்த மதம், சமண மதம் முதலியன வன்மை குன்றி வைஷ்ணவ மதம் தலையெடுக்கும் காலமாக ஏற்பட்டிருந்ததென்று கூறப்பட்டுள்ளது.

பெல்லால (Bellala) வமிசத்தின் ராஜதானித் தலைமை நகரம் மைசூர் ராஜ்யத்திலுள்ள துவாரசமுத்திரம் (Halebid). பெல்லால அரசர்கள் தாங்கள் ராஜபுத்திரர்கள் என்று சொல்லிக் கொண்டார்கள். பத்தாம் நூற்றாண்டில் அவர்கள் தலையெடுத்ததும் கர்னாடகம் முழுவதையும் தங்களுக்குக் கீழ்க் கொண்டுவந்தது மன்றிக் காஞ்சிபுரத்தையும் பிடித்துக்கொண்டு தமிழ் நாடு முழுவதிலும் கூடத் தங்கள் வெற்றிக் கொடியை நாட்டினார்கள். காலக்கிரமத்தில் இந்த பெல்லால அரசர்களும் முகம்மதியர்களால் ஜெயிக்கப்பட்டு அவர்களது வமிசமும் முடிவுக்கு வந்தது.

டெல்லி சக்கரவர்த்தியாகிய அலாவுதீன் (Allaudin) தனது சேனாதிபதி மாலிக்காபர் (Malikkafur) என்பவனை அனுப்பித் தொண்டமண்டலத்தைச் சூறையாடச் செய்து தனது வெற்றியைத் தெற்கில் ராமேஸ்வரம்வரை பரவச்செய்தான். ஆனால் அம்முகம்மதிய வெற்றி அற்ப காலந்தா னிருந்தது. ஹிந்து அரசர்கள் ஒன்றுகூடி அம்முகம்மதியர்களை எதிர்த்து நர்மதை நதிக்கப்பால் அவர்களை ஓடிப்போகும்படி செய்துவிட்டார்கள்.

பதினைந்தாவது நூற்றாண்டின் மத்தியில் இந்நாடு மறுபடியும் சூறையாடப்பட்டுக் காஞ்சிமாநகரம் கொள்ளை கொள்ளப்பட்டது. அவ்வாறு செய்தது கேஸரி (Kesari) வமிசத்தைச் சேர்ந்த ஒரிஸ்ஸா (Orissa) நாட்டரசர்களில் ஒருவனால் அனுப்பப்பட்ட ஒரு பெரிய சைனியமே. மேற்

கூறிய சம்பவத்தினால் நேர்ந்த தீங்கை ஒருவாறு ஒழுங்கு செய்துகொண்டு இந்நகரம் மறுபடியும் தலையெடுக்க ஆரம்பித்ததும், இது போராட்டங்களுக்கு இரையாகி, இதிலிருந்த சிவாலயமும் கொள்ளையடித்துக்கொண்டு போய் விடும்படி நேர்ந்தது. இப்பொழுது படையெடுத்து வந்தது இரண்டாவது முகம்மத். இவன் தக்ஷணத்துக் கடைசி பாமினி (Bahmeni) அரசன்.

விஜயநகர ராஜ்யம் புக்கன், ஹரிஹரன் என்ற இருவரால் ஸ்தாபிக்கப்பட்டுப்பிரபலமடைந்துவந்தது. தொண்டமண்டலத்தில் சோழ ராஜாக்களது அதிகாரம் கவிழ்க்கப்பட்டதற்குக் காரணமும் பிரபல மடைந்து வந்த இந்த விஜயநகர ராஜ்யத்தை ஸ்தாபித்த இருவரே. மேற்கூறிய விஜயநகர அரசர்களது வெற்றியும் அதிக நாட்பட் டிருக்கவில்லை. பாமினி அரசர்கள் ஒற்றுமையின்றியிருந்ததால்தான் விஜயநகர அரசர்கள் வலிமை பெற் றிருந்தார்கள். அவர்கள் ஒன்று கூடிவிட்டது விஜயநகர ராஜ்யம் தலையெடுக்கமுடியாமற் போகும்படி செய்துவிட்டது மன்றி, அந்த ராஜ்யமே அழிந்து போகும்படியான நிலைமைக்கு வந்து விட்டது. இந்த ஜில்லாவின் சரித்திரத்தில் பெரும்பாகம் காஞ்சிபுரம், திருப்பருத்திக்குன்றத்திலுள்ள சமணர்களது கோவிலில்ஏற்பட்டுள்ள சிலா லிகிதங்களில் அமைந்துள்ளது. அந்த லிகிதங்களில் மேற்கூறியுள்ள விஜயநகர ராஜ்யத்தை ஸ்தாபனம் செய்த புக்க ராஜா (Bukka) ஒரு கொடை யளித்திருந்ததாகக் கூறப்பட்டிருத்தல் விஜயநகர ராஜ்யம்,

தொண்டமண்டலத்தில் சோழர்களது அதிகாரத்தைக் கவிழ்த்திருக்கக் கூடுமென்ற சந்தேகத்திற்குக் கொஞ்சம் பலத்தைக் கொடுக்கிறது. இந்த ஹிந்து விஜயநகர அரசகுமாரர்களின் முதல் பரம்பரையின் கீழிருந்த ராஜ்யம் ஒரு நரசிங்கராயர் என்றவரால் கபடமாய் அபகரிக்கப் பட்டிருந்தது. அவர் காஞ்சியையும், செஞ்சி நாட்டையும் பாமினி அரசர்களிடமிருந்து பிடுங்கிக்கொண்டு வீரவசந்த ராயர் என்ற ஒரு ராஜப்பிரதிநிதியைக் காஞ்சிமா நகரில் ஏற்படுத்தி வைத்தார். இதுவும் இன்னும் மற்ற வெற்றிகளும் மேற்கூறிய நரசிங்கராயரது குமாரராகிய கிருஷ்ண தேவராயரால் ஒன்று சேர்த்து உறுதியாக்கப்பட்டது. நரசிங்கராயருக்குப் பிறகு அரசராக வந்தவரும் இந்தக் கிருஷ்ணதேவ ராயரே.

சோழமன்னர்கள் தஞ்சைமா நகரில் அரசுபுரிந்து வந்ததாக்க் காட்டிக்கொண்டு வந்தார்களே ஒழிய வேறில்லை. சுமாராக 1650-ம் வருஷத்தில் ஈகோஜி என்ற மஹாராஷ்டிரனால் கடைசியாகத் தோற்கடிக்கப் பட்டவரை நமுதுக்குக் கூடக் காஞ்சிபுரத்தின்மீது அவர்களுக்கு மேலதிகாரம் இருந்திழந்ததைத் திரும்பி அடைய முடியவில்லை. பதினைந்தாம் நூற்றாண்டிற்குப் பிறகு அவர்கள் தலையெடுக்கவே முடியவில்லை. கிருஷ்ணராயரென்றழைக்கப்பட்டு வந்த கிருஷ்ணதேவ ராயரும் பிராம்ஹண விசுவாஸமுள்ளவர். பிராம்ஹணர்களைப் பரிபாலனஞ்செய்துவந்தார். காஞ்சிமா நகரத்திலுள்ள சிவாலயத்தைப் பழுதுபார்த்துப் பிரதானமான விஷ்ணு ஆல

யத்தை இப்பொழு திருப்பதுபோல் கட்டிமுடித்து வைத் தவரும் இவரே. இவ்வேலைகளைத் தவிர அவர் ஜில்லா முழுவதிலுமே பற்பல வேலைகளையும் செய்து முடித் திருந்தார். மேற்கூறிய வேலைகளில் அவரது மந்திரி திம்ம ராஜா என்ற பிராமணர் அவருக்குப் பேருதவி செய் ததுமன்றி, ஸ்திரமான அரசாட்சியையும் ஏற்படுத்தியிருந் தார். இக்காலத்தில் நாடு பற்பல சிறிய தலைவர்களின்கீழ்ப் பற்பல பிரிவுகளாகப்பிரிந்து ஆட்சி செய்யப்பட்டுவந்த காரணம்பற்றி ஸ்திரமான ஆட்சி பெற்றிருக்கவில்லை. ஆத லால் மந்திரி திம்மராஜா ஒருவித ஸ்திரமான ஆட்சியை ஜனங்களுக்கு அளிக்கவேண்டியது முக்கியமான விஷய மாக ஏற்பட்டது. தவிரவும் மேற்கூறிய தலைவர்கள் சோழர்களது அதிகாரம் கவிழ்ந்ததுமே தாங்கள்சுயேச்சை யடைந்ததாக உணர்ந்து ஸரியான ஒழுங்குபெற்ற ஒருவித ஸ்திரமான ஆட்சியின்கீழ்ப் பிரஜைகளை வைத்துக்கொண் டிருக்கவில்லை. அவர்கள் குரும்பர் அல்லது பல்லவ ஜாதி யைச் சேர்ந்தவர்கள். சோழராஜாக்களால் தோற்கடிக்கப் பட்டுத் தங்கள் தங்களது சொத்துக்களைப் பிடுங்கிக்கொள் ளும்படி விட்டுவிட நேர்ந்ததை உணர்ந்திருந்தார்கள்.

கிருஷ்ணராயருக்குப் பின் வந்தவர்களும் அவரது மாதிரியையும் மார்க்கத்தையும் அநுசரித்தார்கள். ஆனல் ரேய்ச்சூருக் (Raichur) கருகிலுள்ள தளிக்கோட்டை (Talikota) என்னு மிடத்தில் பாமினி ராஜ்யத்தின் சுல்தான்கள் ஒன்றுகூடி விஜயநகர அரசர்களைத் தோற் கடித்து அவர்களது அதிகாரத்தைக் குலைத்துவிட்டார்

கள். இந்தச் சண்டைக்குப் பிறகு தோற்றுப்போன அவர்கள் பேனுகொண்டா (Penukonda) என்னுமிடம் சென்று கடைசியாக டெல்லி சக்கரவர்த்தியின் சைநியங்கள் துரத்திக்கொண்டுவரச் சந்திரகிரிக் கோட்டைக்கு ஓடும்படி நேர்ந்தது. அங்கும் செங்கல்பட்டிலும் தோற்றுப் போன விஜயநகர அரசர்களின் சந்ததியார்கள் அது முதல் நசித்துவந்தார்கள். சுமார் 1625-ம் வருஷத்தில் வீரராம ராஜா என்றவன் தனது வமிசத்தின் முந்திய சொத்துக்களில் சிலவற்றைத் திரும்பவும் அடைந்து, முந்திய தலைமை நகருக்கு இரண்டு மைல் தூரத்திலிருந்த ஆனகுந்தி (Anagundi near Hampi) என்னுமிடத்தில் இருந்துவந்தான். அங்கு திப்புவினால் தோற்கடிக்கப்பட்டு நாட்டை இழக்க நேர்ந்து ஊரும் நெருப்பிற் கிரையிடப் படும்வரை விஜயநகர வம்சத்தினர் அவ்விடத்தை விட்டுப் பெயர்ந்ததில்லை. கர்நாடகத்தில் விஜயபுர ஆட்சிமுடிவுக்கு வந்தது. சந்திரகிரி மகாராஜா மூன்றுவது ஸ்ரீரங்கராயரால் 1639-ம் வருஷத்தில் ஈஸ்டு இந்தியா கம்பெனியாருக்குச் சென்னையில் கோட்டை கட்டிக்கொள்ள இடம்கொடுத்தது. இதற்கு ஏழு வருஷங்களுக்குப் பிறகு நாட்டின் அந்த பாகம் கோல்கொண்டா முகம்மதிய அரசனால் கவரப்பட்டு அவனது சுவாதீனத்தில் இருந்துவந்தது. ஏராளமான பண உதவி செய்து மஹாராஷ்டிரர்களது உதவியை அடைந்து அந்நாட்டை அவன் தன்னிடமிருந்து போய் விடாமல் பாதுகாத்து வைத்துக்கொண்டிருந்தான். இந்த நாற்பத்திரண்டு வருஷங்களில் இந்த ஜில்லா அடைந்த கஷ்டம் சொல்ல முடியாது. கிராமங்கள் ஆளும் தலைவர்களின்றி ஜனங்கள் பட்ட கஷ்டம் அதிகம்.

அலாஉதீன் காலத்தில் மாலிக்காபர் படையெடுத்த சந்தர்ப்பம் நீங்கலாக ஔரங்கசீப் காலம் வரை முகம்மதிய சக்கரவர்த்திகள் கர்நாடகத்தைக் கைவசப் படுத்திக் கொண்டிருக்கவில்லை. கஜினி (Ghazni) வமிசத்திற்குப் பிறகு அடிமை யரசர்கள் ஆண்டார்கள். அவர்களுக்குப் பிறகு கில்ஜி (Khilji) வமிசத்தரசர்களும் அதன்பின் துக்லக் பரம்பரை (Toghlak) அரசர்களும் அரசாட்சி புரிந்து வந்தார்கள். கடைசியாகத் தார்த்தாரி (Tartar) தேசத்திலிருந்துவந்த தாமர்லேன்(Tamerlane) என்றவன் டெல்லியைப் படையெடுத்துச் சூறையாடிக் கொள்ளையிட்டுக் கொளுத்தினன். அவன் இந்தியாவினின்றும் அகன்றதும் சைது (Seiyad) வமிசத்தவர்களும் அவர்களுக்குப் பிறகு லோடி (Lodi) வமிசத்தவர்களும் ஆண்டார்கள். இந்த லோடி வம்சத்தின் கடைசி அரசன் 1526-ம் வருஷத்தில் பேபர் சக்கரவர்த்தியால் தோற்கடிக்கப்பட்டான். இவ்வாறு ஸ்தாபனம் செய்யப்பட்ட தைமூர் வமிசத்திய ஆறுவது அரசன் தான் ஔரங்கசீப். அதிகார பிரியமும் மிக்க ராஜதந்திரமும் கபடமும் பொருந்திய அவன் காலத்தில் ராஜ்ஜியம் அதி உன்னதமான நிலைமையை அடைந்தது. பிறகு அதன் பெருமை குன்றிக் கொஞ்சம் கொஞ்சமாய் க்ஷீணிக்கத் தலைப்பட்டது. கி. பி. 1670-ல் பிரக்யாதி வாய்ந்திருந்த அரசன் ஔரங்கசீப். அவனது ராஜ்ஜியம் காஷ்மீரிலிருந்து (Kashmir) சிட்டகாங் (Chittagong) வரை பரவியிருந்தது. அவனது ஐசுவரியத்திற்கோ அளவில்லை. அவன் அதிகாரம் எவராலும் மறுக்கப்படவில்லை.

லக்ஷக்கணக்கான ஜனங்கள் அவனுக்கு வணங்கி அடங்கிக் கப்பம் கட்டி வந்தார்கள். ஆனால் ஓர் குறை ஏற்பட்டிருந்தது. அது ராஜ்ஜியம் கன்னியாகுமரி வரைக்கும் பரவவில்லை யென்பதே. இக்குறையை நிவர்த்திசெய்ய அவன் பீஜப்பூர், கோல்கொண்டா நாடுகளின் அரசர்களையும் மஹாராஷ்டிரர்களையும் எதிர்த்துச் சென்றான். 1686-வது வருஷத்தில் பீஜப்பூர் (Bijapur) பிடிபட்டது. அடுத்த வருஷம் அவன் அப்தல் ஹாஸாம் என்றவனையும் அவனது கோல்கொண்டாவின் தூர்க்கத்தையும் பிடித்துக்கொண்டான். 1689-ம் வருஷத்தில் மஹாராஷ்டிரர்களின் தலைவனான ஸாம்பாஜியைப் பிடித்து மிகக் குரூரமாய்க் கொலை செய்தான்.

அக்காலத்தில் போர்த்துகேசியரும், டச்சுக்காரர்களும், இங்கிலிஷ்காரர்களும் வந்து குடியேறினார்கள். தெற்கில் ஹிந்துக்களது அதிகாரம் க்ஷீணித்து டெல்லி ராஜியமும், தக்ஷணத்திலுள்ள முகம்மதிய ராஜியங்களும் அதிகாரத்தை அடையப் போட்டி போட்டதினால் ஏற்பட்ட அரசின்மை ஐரோப்பிய ஜாதியார்கள் வந்து குடியேறுவதற்கு ஏற்ற காலமாக ஏற்பட்டது. அவர்கள் இந்தியா செல்வத்திற் சிறந்த தேசமெனக் கேள்வியுற்று, அதில் கொஞ்சம் அடைய எண்ணங்கொண்டார்கள். 1498-வது வருஷத்தில் போர்த்துகேசியர் நன்னம்பிக்கை முனை (Cape of Good Hope) வழியாக இந்தியாவிற்கு வழி கண்டு பிடித்த பிறகு அதற்காக முயற்சி செய்தார்கள். 16வது நூற்றாண்டு முழுவதிலும் போர்த்துகேசியர்கள்

கரை ஓரங்களில் தாங்கள் அடைந்த விடங்களை ஒன்று சேர்த்துப் பலப்படுத்திக் கொள்வதிலேயே முயன்று கொண்டிருந்தார்கள்.

1580-வது வருஷம் டச்சுக்காரர்கள் சுயேச்சை அடைந்தார்கள். தங்களது நாட்டில் கப்பல்கள் கட்டக் கூட மரம் கிடையாமலிருந்த இந்த ஜாதியார் ஐரோப்பா கண்டத்திலேயே சாமான்களை வெளி தேசங்களுக்குக் கொண்டுபோய்க் கொண்டுவரக்கூடிய நிலைமையை அடைந்திருந்தது மன்றி, வர்த்தகத்தையே முற்றிலும் அவர்களே கைக்கொண்டு விடுவார்களோ என்று மற்றவர்கள் அஞ்சுமாறும் செய்தார்கள். இந்த சமயத்தில் ஆங்கிலேயரும் சும்மா இராமல் 1599-ம் வருஷத்தில் கீழ் இந்தியத் தீவுகளோடு வியாபாரம் செய்ய ஒரு கம்பெனியை லண்டன்மா நகரில் ஏற்பாடு செய்தார்கள். அவர்களும், டச்சுக்காரர்களும் முதல் முதல் படேவியா, (Batavia) ஸ்பைஸ் தீவுகளில் (Spice Islands) போட்டி போட்டு வியாபாரம் செய்து லாபத்தை அடைய முயன்றார்கள். அப்பொழுது இவ்விரு ஜாதியார்களுக்கும் துவேஷம் ஏற்பட்டது. அந்த துவேஷத்தை அவ்விரு ஜாதியார்களும் செய்த எல்லாக் காரியங்களிலும் காட்டினர். போர்த்துக்கேசியருக்கே கீழ்சமுத்திரக் கரையில் ஸாந்தோம் (San Thome) முதலிய வியாபார ஸ்தலங்கள் ஏற்பட்டிருந்த போதிலும் அவர்களது கவனம் முக்கியமாக மேற்குக் கரை ஸ்தலங்களிலேயே சென்றது. ஆனால் முதல் முதல் வந்த டச்சு பிரெஞ்சு வர்த்தகர்களது கவ

ணம் கிழக்குக் கரையில் சென்றது. ஆங்கிலேயர்கள் முதல் முதல் 1612-ம் வருஷத்தில் முகலாய சக்கிரவர்க்தியின் கொடை கொண்டு புராதன சூரத் (Surat) நகரத்தில் தங்கினார்கள். பிறகு சென்னைக்கு வடக்கில் வியாபார ஸ்தலங்கள் ஸ்தாபனம் செய்து கொண்டு பழவேற்காட்டை (Pulicat) டச்சுக்காரர்களுடன் பங்கிட்டுக் கொள்ள முயன்றார்கள். ஆனால் அது பயன்பட வில்லை. டச்சுக்காரர்கள் முன்னமே அங்கு ஒரு கோட்டை கட்டிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது கம்பெனிக்குத் தலைவராக இருந்தவர் டே (Day) என்றவர். அவர் 1639-ம் வருஷத்தில் இப்பொழுது சென்னைமா நகர மிருக்கும் இடத்தில் ஒரு மைல் அகலமும் ஐந்து மைல் நீளமுமுள்ள நிலத்தைப் பெற்றுக்கொண்டார். ஹிந்து அரசாட்சியின் கடைசியான செய்கைகளில் இக்கொடையும் ஒன்று. மேற்கூறிய ஸ்தலம் அப்பொழுது செங்கல்பட்டு நாயக்கர் என்பவரது ஆதினத்தில் இருந்தது. இந்த நாயக்கர் என்ற ஆட்சி செய்யும் அதிகாரிதான் சந்திரகிரி அரசரது அநுமதியை அடைந்து அக்கொடையை ஆங்கிலேயர்களது வர்த்தகக் கம்பெனியாருக் களித்தது. அந்த நாயக்கரது தகப்பனாரது பெயரை ஒட்டித் தான் அந்த ஸ்தலத்திற்குச் சென்னப்பட்டணமென்ற பெயர் கொடுத்துக் கொடையாக அளிக்கப்பட்டது. இப்பொழுதும் அது ராஜதானியின் தலைமை நகரமாக இருந்து வருகிறது. சந்திரகிரி மஹாராஜா தனது வம்சத்திற்கு ஒரு வித பெருமை ஏற்படுமென்ற எண்ணத்துடன் மேற்கூறிய கொடை ஸ்தலத்திற்கு ஸ்ரீரங்கராயன் பட்டினமென்ற

பெயரை இம்படி கூறினர். நாயக்கரின் தகப்பனு ருக்கு மரியாதையாகச் சென்னப்பட்டின மென்ற பெயரை இட்ட பிறகு அவரது அபிப்பிராயம் கம்பெனியாருக்கு தெரிந்திருக்க வேண்டும், அல்லது அவர்கள் அரசரது வேண்டுகோளை அலக்ஷியம் செய்து நாயக்கரது இஷ்டம் போல் செய்து அவரது தயவைப் பெற அவ்வாறு செய் திருக்கவேண்டும். அந்த ஸ்தலத்திற்கு அவ்வரசனது பெயர் இடப்படவே யில்லை.

1645-வது வருஷத்தில் பாளையக்காரர்களும் நாயக்க மார்களும் இங்கிலீஷ்காரர்களது நட்பைத் திரஸ்காரம் செய்து முகம்மதியர்களை அவர்களை எதிர்க்கும்படி கேட்டுக் கொண்டார்கள். சந்திரகிரி மஹாராஜா மைசூ ருக்கு ஓடிப்போய், மறுபடி அவர் என்ன ஆனார் என்பது கூடத் தெரியாமற்போயிற்று. இதற் கிடையில் பலமான சண்டைஏற்பட்டுச்சென்னைக்கு வடபாகமெல்லாம்பாழாகி விட்டது. சிலவேளைகளில் சண்டை முகம்மதியர்களுக் கும் ஹிந்துக்களுக்குமாக ஏற்படும். சிலசமயங்களில் முகம்மதிய அரசர்களுக்குள்ளேயே யார் பலசாலியென்று நிர்ணயிக்கச் சண்டை நேரிட்டதும் உண்டு. கடைசியாக கர்னாடகத்தில் கோலகொண்டா அரசன் தனது அதிகா ரத்தை ஸ்தாபித்தான். இந்த கோலகொண்டாவின் அர- சன் கீழ் அனேகம் உத்தியோகஸ்தர்கள் இருந்தார்கள். ஐரோப்பியர்கள் இந்த உத்தியோகஸ்தர்களுக்கு வெகுமதி கொடுத்துத் தங்கள் காரியங்களை சாதித்துக்கொள்ள வேண்டியிருந்தது. பூந்தமல்லி (Poonamallee) லிங்கப்ப

நாயக்கன் என்பவன் அத்தகைய உத்தியோகஸ்தர்களில் ஒருவன். அவனது தலைமை வாஸஸ்தலம் காஞ்சிபுரம். அவன் அதிகாரம் பீஜப்பூர்வரைக்கும் பரவியிருந்தது. அவனுக்கும் இங்கிலீஷ்காரர்களுக்கும் துவேஷம் உண்டாயிற்று. ஏனெனில் அவன் கேட்டதை இங்கிலீஷ்காரர்கள் கொடுக்க மறுத்துவிட்டார்கள். ஆதலால் அவன் கோல்கொண்டா அரசனிடம் அவனது ஆஸ்தான பிராமண அதிகாரியின் மூலமாக ஆங்கிலேயர்கள் கர்விகள் என்றும், கெட்டவர்கள் என்றும் கூறி அவர் அவர்களை வெறுத்து பிரெஞ்சுக்காரர்களிடமும், டச்சுக்காரர்களிடமும் நட்புக் கொள்ளும்படி செய்ய முயன்றான். ஏனெனில் பிரெஞ்சுக்காரர்களும், டச்சுக்காரர்களும் இந்த லிங்கப்ப நாயக்கனிடம் எப்பொழுதும் நட்பாகவே நடந்து கொண்டுவந்து அவனைத் திருப்தி செய்வித்திருந்தார்கள். உடனே கோல்கொண்டா அரசன் இங்கிலீஷ்காரர்கள் 600 கெஜம் ஜவுளி அனுப்பவேண்டுமென்றும், பண்டசாலையின் ஆறுமாத வாடகையை முன்னரே கட்டி விடவேண்டும் என்றும் உத்தரவு அனுப்ப அவனைச்சமாதானப்படுத்த ஆங்கில கவர்னர் சர் வில்லியம் லாங்ஹார்ன் (Sir William Langhorn) என்றவர் அப்படியே செய்ய நேர்ந்தது.

இப்பொழுது மஹாராஷ்டிரர்கள் கோல்கொண்டாவை எதிர்த்தார்கள். சிவாஜி முகம்மதியர்களைத் தக்ஷணத்திலிருந்தும் அகற்றிவிட எண்ணியதை ஒளரங்கஸீப் தடுக்க முயன்றான். ஆனால் அவன் நாட்டில் சண்டையும் சச்சரவுமாக விருந்தது பற்றி அவன் சிவாஜியிடம் நட்பு

பாராட்டி வரும்படி நேர்ந்தது. சிவாஜியும் பீஜப்பூர் கோல்கொண்டா தேசங்களை எதிர்த்து வெற்றிபெற்று அவ்வரசர்களைக் கீழ்ப்படுத்திக்கொண்டு அவர்கள் தனக்குக் கப்பம்கட்டும்படி செய்தான். பிறகு ஹிந்து அதிகாரத்தை நிர்ணயிக்கத் தெற்கில் படையெடுத்துச் சென்று 1677-ம் வருஷத்தில் சென்னைக்கருகாகச் சென்று திருவள்ளூரில் தங்கினன். சிவாஜியின் உத்தியோகஸ்தர்களுக்கு இங்கிலீஷ்காரர்கள் அடிக்கடி பரிசளிக்கவேண்டியிருந்தது. சிவாஜியும் அனேக சாமான்களைக் கேட்டனுப்பிப் பெற்றுக்கொண்டானும். ஆனுல் கடைசியாக சிவாஜி சில இங்கிலீஷ் எஞ்சினியர்களை அனுப்பும்படி கேட்டதை ஆங்கிலேயர்கள் மறுக்கவே சிவாஜி அவர்களிடம் துவேஷம் கொண்டான். பிறகு பழவேற்காடு, சதுரங்கப்பட்டணம் (Sadras) சென்னை முதலியவிடங்களை எதிர்த்துக்கொள்ளையடிக்க சிவாஜி உத்தரவு செய்தான். ஆனுல் அவன் மைசூர் நாயக்கர்களுடன் சண்டையிட நேர்ந்ததால் ஆங்கிலேயரது பயம் கொஞ்சம் தெளிந்தது. லிங்கப்பன் மாத்திரம் வெகுமானம் கேட்பதை நிறுத்தவில்லை.

சில காலத்திற் கெல்லாம் ஔரங்கசீப் தனது ராஜ்யத்தை ஒழுங்குபடுத்திக் கொண்டு தக்ஷணத்தைப் படையெடுத்தான். 1685-வது வருஷத்தில் அவன் கோல்கொண்டாவைப் பிடுங்கிக்கொண்டு அதன் அரசனைக் கொன்றுவிட்டான். மறு வருஷத்தில் சாம்பாஜியையும் அப்படியே செய்தான். ஔரங்கசீப்பின் எண்ணம் நிறைவேறிற்று. அவன் மஹாராஷ்டிரர்களை அவர்களது

கோட்டைகளில் ஓடி ஒளித்துக்கொள்ளும்படி செய்தான். ஆனால் ஔரங்கசீப் இறந்ததும் கர்னாடகத்தில் முகலாய அதிகாரம் க்ஷீணித்தது. மேற்கூறிய சண்டை சச்சரவுக் காலங்களில் ஆங்கிலேயர்கள் விருத்தியடைந்துகொண்டே வந்து படிப்படியாக இந்தியாவில் ஏற்பட்டிருந்த இதர ஐரோப்பிய ஜாதியார்களது அதிகாரத்தையும் மற்ற இந்திய அரசர்களது அதிகாரத்தையும் பலத்தையும் ஒடுக்கித் தற்காலத்தில் இருக்கும் நிலைமைக்கு இங்கிலீஷ்காரர்களது ஆட்சியைக் கொண்டுவந்தார்கள்.

செங்கற்பட்டு ஜில்லா ஆரம்பத்தில் கர்நாடக நவாபாகிய முஹம்மது அலி ஈஸ்ட்டு இந்தியா கம்பெனியாருக்குக் கொடுத்த ஒரு ஜாகீர். அவன் எதற்காக இந்த ஜில்லாவை மேற்படி கம்பெனிக்கு ஜாகீராகக் கொடுத்தான் என்பது சரித்திர சம்பந்தமான விஷயம். புராதன கர்நாடக வமிசத்தைச் சேர்ந்த சந்தா சாகிப் என்பவன் பிரெஞ்சுக் காரர்களது உதவியைக்கொண்டு முஹம்மது அலியின் தகப்பனாகிய அன்வாருதீன் என்பவனைக் கொன்றுவிட்டுத்தானே கர்நாடக நவாப் என்று சொல்லிக் கொண்டான். தனது தகப்பனாரைக் கர்நாடக நவாப்பாக வைத்துப் பாதுகாத்து வந்த ஹைதராபாத் நிஜாம் இறந்துபோனதால் தைரியம் கொண்டு அத்தகைய காரியத்தைச் செய்த சந்தா சாகிப் தன்னையும் கொன்று விடுவானோ என்று பயந்த முஹம்மது அலி திரிச்சினாப்பள்ளிக்கு ஓடிப்போனான். ஆனால் சந்தாசாகிப் அவனை

விட்டுவிட வில்லை. அவன் உயிருட னிருந்தால் தனக்கு அபாயமே எனப் பயந்த அந்தச் சந்தா சாஹேப் அவனைத் துரத்திச்சென்று திரிச்சினுப்பள்ளியை முற்றுகை செய்தான். பிரெஞ்சு கவர்னராகிய டூப்ளே அவனுக்கு உதவி புரிந்தான், ஏனெனில் அவன் இங்கிலீஷ்காரர்களை இந்தியாவிலிருந்து துரத்திவிடவேண்டுமென்ற எண்ணம்கொண்டிருந்ததால் கர்நாடக நவாப் தனது மனிதனுகவிருக்கவேண்டுமென்ற எண்ணம்கொண்டு அவ்வாறு செய்தான். ஆனுல் இங்கிலீஷ் காரர்கள் அவனது எண்ணம் நிறைவேற விடவில்லை. சந்தாசாகிப்பின் தலைமை நகராகிய ஆற்காட்டைப் பிடித்துக் கொண்டு திரிச்சினுப்பள்ளியை முற்றுகை செய்துகொண்டிருந்த சைனியத்தில் ஒரு பாகத்தை அவன் ஆற்காட்டிற்கு அனுப்பும்படிசெய்து இறுதியில் முகம்மதலியைச் சந்தாசாகிப் கையிலிருந்து தப்பவைத்தது மன்றித் தங்களின்கீழ் அவனைக் கர்நாடக நவாபாகவும் செய்தார்கள்.

இப் பேருதவிக்காகத்தான் செங்கல்பட்டு ஜில்லா ஈஸ்டு இந்தியா கம்பெனியாருக்கு முஹம்மது அலியினுல் ஜாகீராகக் கொடுக்கப்பட்டது. அது கொடுக்கப்பட்ட வருஷம் 1760. ஆனுல் அக்கொடை தெக்ஷண சுபேதாரால் 1763-வது வருஷம் வரையில் ஊர்ஜிதப்படுத்தப் படாம லிருந்தது.

---

## அத்தியாயம் 2

### விசேஷ இடங்கள்

சைதாப்பேட்டை (Saidapet). செங்கல்பட்டு ஜில்லாவிலுள்ள முக்கியமான ஊர்களில் இது ஒன்று. இது மௌண்ட்ரோட்டில் ஸெயிண்ட் ஜார்ஜ் கோட்டைக்கு ஐந்து மைல் தூரத்தி லிருக்கிறது. 1859-வது வருஷம் முதல் கலெக்டரின் முக்கிய வாஸஸ்தலமாக இது இருந்து கொண்டிருக்கிறது. இங்கு ஹோம்ஸ் கார்டென்ஸ் (Homes Gardens) என்ற ஒரு கட்டிட மிருக்கிறது. அக் கட்டிடத்தில் தான், கலெக்டரது ஆபீசும், கஜானாவும், அஸிஸ்டெண்ட் கலெக்டர், கஜானா டெபுடி கலெக்டர் ஆபீசுகளும் இருக்கின்றன. இக்கட்டிடம் இப்பொழுது பெரிதாக்கி விருத்தி செய்யப்பட்டிருக்கிறது.

கிண்டி (Guindy). இது சைதாப்பேட்டையின் சமீபத்தில் ஒன்றரை மைல் தூரத்தில் ஏற்பட்டிருக்கிறது. சென்னை கவர்னருக்கு இங்கு ஒரு நாட்டுப்புற பங்களா இருக்கிறது. 1821-ம் வருஷத்தில் ஸர் தாமஸ் மன்ரோ (Sir Thomas Munro) என்றவர் ஒரு குறிப்பு எழுதி வைத்தார். ஆதியில் கவர்னர் இருந்துவந்த கோட்டை விடுதி ஸெகிரடேரியட் ஆபீஸ் என்ற அரசாங்கக் கச்சேரிகளுக்காக எடுத்துக் கொள்ளப்பட்டதால் திருவல்லிக்கேணியிலுள்ள கார்டன் அவுஸ் (Garden House) என்னும் விடுதி அவரது நகரவிடுதியாக ஏற்படவேண்டியதாயிற்று. கவர்னருக்கு முன் னிருந்து வந்தது போலவே

ஒரு நாட்டுப்புர மாளிகை வேண்டு மென்பது அவரது கருத்து. ஆகலால் அவர் "கிண்டி லாட்ஜ்" என்ற இடத்தை கவர்ன்மெண்டார் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று எழுதிவைத்தார். அவரது அபிப்பிராயம் கவர்ன்மெண்டாரால் அங்கீகரிக்கப்பட்டு மேற்கூறிய கிண்டி லாட்ஜ் (Guindy Lodge) என்ற இடமும் அதைச் சுற்றிலுமுள்ள சிறிது நிலமும் எடுத்துக்கொள்ளப்பட்டது. கிண்டி லாட்ஜ் முதலில் விருத்தி செய்யப்பட்டுப் பிறகு 1822-ல் கட்டிடம் அதிகமாக்கவும் பட்டது. அப்போதைக்கப்போது புதிது புதிதாக நிலங்கள் நந்தவனத்திற்காக எடுத்துக்கொள்ளப்பட்டு, அநேக புதுக்கட்டிடங்களும் முந்தியிருந்த கட்டிடத்திற்குச் சேர்க்கப்பட்டன.

எஞ்சினியரிங் காலேஜ் (Engineering College). சேப்பாக்கில (Chepauk) முந்திய கர்நாடக நவாப் அரண்மனை யிருக்குமிடத்தில் 1894-ம் வருஷத்தில் ஒரு ஸர்வேப் பள்ளிக்கூடம் ஏற்படுத்தப்பட்டது. அது நாளடைவில் விருத்தியாகிச் சென்னை ஸிவில் எஞ்சினியரிங் காலேஜாயிற்று. 1859-வது வருஷத்தில் அது சென்னை யூனிவர்ஸிட்டியின் மேற்பார்வையில் வந்தது. 1877-வது வருஷத்தில் அதன் பெயர் எஞ்சினியரிங் காலேஜ் என்று மாற்றப்பெற்றது. சில வருஷங்களுக்கப்பால் அது கிண்டிக்கு மாற்றப்பட்டது. 1920-வது வருஷத்தில் அது வசித்திருந்து கற்கும் கல்லூரியாக ஏற்பட்டது.

1906-வது வருஷத்தில் இக் கல்லூரியில் போதனை முறை மாற்றப்பட்டது. நான்கு வகுப்புகள் ஏற்பட்

டன. அவை (1) ஸிவில் எஞ்சினியரிங் (Civil Engineering), (2) மெக்கானிக்கல் எஞ்சினியரிங் (Mechanical Engineering), (3) அப்பர் ஸபார்டினேட் (Upper Subordinate), (4) லோயர் ஸபார்டினேட் (Lower Subordinate) என்ற வகுப்புகள். 1907-வது வருஷத்தில் எஞ்சினியர் பரீட்சைக்குப் போகவேண்டிய மாணவர்களும், அப்பர் ஸபார்டினேட் பரீக்ஷைக்குப் போகவேண்டிய மாணவர்களும் நான்கு வருஷங்கள் இந்தக் கல்லூரியில் படிக்கவேண்டுமென்று நிர்ணயிக்கப்பட்டது. இதற்கு முன் இக்கல்லூரியில் சேர விரும்பும் மாணவர்கள் பிரவேசப் பரீக்ஷை என்ற ஒரு பரீக்ஷை செய்யப்பட்டுத் தெரிந்தெடுக்கப்பட்டு வந்தார்கள். இப்பொழுது அது நிறுத்தப்பட்டு காலேஜ் தலைமை உத்தியோகஸ்தரே (Principal) கவர்ண்மெண்டாரால் நியமனம் செய்யப்பட்டிருக்கும் சில கனவான்களுடன் கலந்து பேசி மாணவர்களைத் தெரிந்தெடுத்துக்கொள்கிறார். மேற்கூறிய கனவான்கள் அடங்கிய ஓர் கூட்டத்திற்கு "செலக்ஷன் கமிட்டி" என்று பெயர். அதற்கு அக்கிராசனாதிபதி கல்லூரித் தலைவர் (Principal). 1920-வது வருஷத்தில் மராமத்து இலாகா-(Public Works Department) ஒழுங்குபடுத்தப்பட்டபொழுது மேற்கூறியுள்ள அப்பர் ஸபார்டினேட், லோயர் ஸபார்டினேட் என்ற இரு வகுப்பும் போய், "சபார்டினேட்" என்ற ஒரே வகுப்பு ஏற்படுத்தப்பட்டது. ஆதலால் இப்பொழுது இக் கல்லூரியிலுள்ள வகுப்புகள் மூன்றே.

எஞ்சினியர் வகுப்பு மாணவர்கள் நான்கு வருஷம் போதனைபெற்றுப் பிறகு ஒரு வருஷ அனுபவ போதனை

யும் பெறவேண்டும். சபார்டினேட் வகுப்பினர்கள் மூன்று வருஷத்திய போதனைக்குப் பிறகு ஒரு வருஷத்திய அநுபவப் பயிற்சியும் பெறவேண்டும்.

எஞ்சினியர் வகுப்பில் சேர விரும்பும் மாணவர்கள் சேரப்போகும் வருஷத்திய ஜூன்மாதம் 30-ம் தேதியன்று இருபது வயதிற்குக் கீழ்ப்பட்டிருக்க வேண்டும். தவிர அவர்கள் சென்னை யூனிவர்ஸிட்டி மத்திய தரப் பரீக்ஷையில் தேரியிருக்கவேண்டும். அவர்களது இஷ்டப் பிரிவு அப்பரீக்ஷைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டிருப்பது I-வது தொகுதியைச் சார்ந்திருக்கவேண்டும். மேற்கூறிய பரீக்ஷையைத் தவிர வித்தியா இலாகா டைரக்டர் ஒப்புக் கொள்ளும் வேறுவித பரீக்ஷகளில் தேறியிருப்பவர்களும் சேர்த்துக் கொள்ளப்படலாம். சபார்டினேட் வகுப்பிற்கு கவர்ண்மெண்டாரால் ஒப்புக்கொள்ளப்பட்ட உயர் தரக் கலாசாலைப் படிப்பு முடிந்த சர்டிபிகேட் பெற்றிருப்பவர்களும், யூனிவர்ஸிடி மெட்ரிகுலேஷன் பரீக்ஷையில் தேறியிருப்பவர்களும், அல்லது அப்பரீக்ஷைக்குச் சமமானதென்று டைரக்டர் அபிப்பிராயப்பட்டு ஒப்புக் கொள்ளும் வேறு பரீக்ஷையில் தேறியுள்ளவர்களும் சேர்த்துக் கொள்ளப்படலாம். வயது நிர்ணயமும் எஞ்சினியர் வகுப்பிற்கு ஏற்பட்டுள்ள நிர்ணயமே.

செங்கல்பட்டு (Chingleput). இது ஜில்லாவினுடையவும் அப்பெயர்கொண்ட தாலூகாவினுடையவும் கஸ்பா. இது சென்னை தென்மேற்கு ரஸ்தாவில் அதற்கு 36-மைல் தூரத்தில் இருக்கிறது. தவிர இது பாலாற்றின் வடகரைக்கு

அரைமைல் தூரத்தில் இருக்கிறது. இடையிலுள்ள பாகம் குன்றடர்ந்துளது.

இவ்விடத்தில் இரண்டு ஹைஸ்கூல்கள் இருந்து வருகின்றன. சுமார் 1000 பிள்ளைகள் படித்துவருகிறார்கள். ஒன்றை இந்துக்களும் மற்றொன்றைக் கிருஸ்துவர்களும் பரிபாலித்து வருகிறார்கள். செங்கல்பட்டென்ற இடம் ஒரு சிறிய கிராமமே. ஆனால் உத்தியோகஸ்தர்களிருப்பதும், அதன் இருப்பிடமும் அந்தச் செங்கல் கட்டிடங்களுள்ள கிராமம் பெரிதாகக் காரணங்களாக ஏற்பட்டன. செங்கல்பட்டு என்னும் பெயருக்குச் செங்கல் கட்டிடங்கள் உள்ள ஊர் என்ற அர்த்தம் ஏற்படும். இதன் ஒரு பக்கத்தில் இருப்பது குண்டூர். மற்றப் பக்கத்தில் செழுமை வாய்ந்த கிராமநத்தம். மேற்கூறிய நத்தம் சர்க்கார் வரி ஸம்பந்தமாக ஒரு தனி கிராமமாகக் கருதப்பட்டு வந்தாலும் கஸ்பா நகரத்துடனே சேர்க்கப்பட்டு அதன் ஒரு பாகமாகவே இருந்து வருகிறது.

செங்கற்பட்டு ஒரு புராதனமான ஊர் அல்ல. இங்கு முக்கியமானது கோட்டை. இது அனேகமாய்ப் பதினாறுவது நூற்றாண்டின் இறுதியில் விஜயநகர ராஜ்யம் க்ஷீணித்தவுடன் கட்டப்பட்டிருக்க வேண்டும். 16-வது நூற்றாண்டில் இங்கும், சந்திரகிரியிலும் அரசர்கள் மாற்றி மாற்றிக் கச்சேரி நடத்தியதாகத் தெரிகிறது.

இங்கு படித்துறையுடன் கூடிய குளம் ஒன்றிருக்கிறது. அது கோட்டைக்கு மேற்கில் இருக்கிறது. அதற்குத் "திம்ம ராஜா குளம்" என்று பெயர். அக்குளத்திற்கும்

கோட்டையிலுள்ள அர்சனது அறைக்கும் ஒரு சுரங்க மிருந்ததாம். ஆனால் அது இருந்தவிடம் இப்பொழுது தெரிய வில்லை. முற்காலத்தில் ராஜ ஸ்திரீகள் அச்சுரங்கத்தின் வழியாக வந்து அக்குளத்தில் ஸ்நானம்செய்து போவது வழக்கமாம். ஜனங்கள் இக்குளத்து ஜலத்தைச் சிறந்த தென்று கூறுகிறார்கள். மேற்கூறிய திம்மராஜா கடைசி ராஜாக்களில் ஒருவனாக இருந்திருக்கவேண்டும். கிருஷ்ண தேவராயரது முக்கிய மந்திரிக்கும் திம்மராஜா என்ற பெய ராதலால் அவர் அம்மந்திரியாகவே இருந்தாலு மிருக்கலா அவரும் அவரது அரசனைப்போலவே இந்த ஜில்லாவுக்கு அனேக நன்மை செய்திருக்கிறார்.)

மேற்கூறியுள்ள செங்கல்பட்டுக் கோட்டையைக் கட்டிமுடித்தது ஹிந்துக்களே என்பதில் சந்தேகமில்லை. சாதாரணமாய் முகம்மதியர்கள்கட்டும் கோட்டைகளுக்கும் இதற்கும் வித்தியாசம் உண்டு. தவிரவும் அருகிலுள்ள இடங்களில் அது ஒன்றுதான் ராஜாக்கள் தங்கத்தகுந்த இடம். அதிலுள்ள பூஜா வஸ்துக்கள் அது ஹிந்துக்களது வேலைப்பாடாக விருக்கவேண்டு மென்பதைக் காட்டு கின்றன.

மேற்படி கோட்டை அதைக் கட்டி முடித்தவர்களிட மிருந்து முகம்மதியர்கள் கைவச மாயிற்று. 1751-வது வருஷத்தில் அது சந்தா சாஹிபினால் முகம்மது அலியிட மிருந்து எடுத்துக்கொள்ளப்பட்டது.

பிரெஞ்சு கவர்னர் டூப்ளேயினால் ஆற்காட்டில் வைக் கப்பட்டிருந்த பிரெஞ்சுக் கைதிகள் கிளம்பி வேலூரி

விருந்த சைனியத்தின் உதவிகொண்டு கோட்டை ராணு வத்தை வென்றுவிடும்படி செய்யச் சதியாலோசனை ஏற் படுத்தப்பட்டபொழுது அக்கைதிகளைப் பத்திரமாக வைத் திருக்கத் தகுந்த விடம் செங்கல்பட்டென்று தெரிந்தெடுத் தார்கள்.

இங்கு குற்றவாளிகள் இளம்பிராயத்தில் சிக்ஷிக் கப்பட்டால் அவர்களை வைத்து யோக்கியர்களாக மாற்ற ஒரு (Reformatory School) சீர்திருத்தச் சாலை ஏற்பட்டிருக்கிறது. தவிரவும் ஐரோப்பிய யூரேஷிய ஜாதிக் கடன்காரர்களுக்கு "ராஜாமஹால்" அல்லது "தேர் மஹால்" (Thermahal) (படம் 2) என்ற கட்டிடம் சிறையாக ஏற்பட்டிருக்கிறது. ஜில்லா மாஜிஸ்டிரேட், ஜில்லா ஜட்ஜி முதலியவர்கள் இந்த ஜெயில் முதலான வைகள் ஸரியாக வைக்கப்பட்டிருக் கின்றனவா என்று மேற்பார்வை பார்த்து வருகிறார்கள். கைதிகளின் வேலை வைக்கோல் காயவைப்பதும், புல் அறுப்பதும், கற்கள் உடைப்பதும், ரஸ்தாக்களைப்பழுது பார்ப்பதும், தங்களது உபயோகத்திற்கு வேண்டிய காய்கறிகளைப் பயிர்செய்வதும்.

இங்கு கோட்டைக்குள் உள்ள முக்கியமான பொதுக் கட்டிடங்கள் ஜில்லா ஜட்ஜ், முனிசீப் கச்சேரிகள், தாலூகா கச்சேரி, கஜானா, சப்ஜெயில் முதலியன. தவிர இவ்வூரில் ஒரு லோகல்பண்டு சத்திரமும் உண்டு. செங்கல்பட்டு சாதாரணமாய்த் தேஹ ஆரோக் கியமான இடமெனவே கூறவேண்டும். சீதோஷ்ண நிலை

யிதமாகக் குளிர்ச்சி பொருந்தியதே. இவ்விடத்தில் குஷ்ட வியாதியால் வருந்துபவர்களுக்கு ஒரு ஆஸ்பத்திரி இருக்கிறது. இது சமீபத்தில் ஏற்பட்டது.

காஞ்சீபுரம் (Conjeevaram). இவ்வூர் சென்னை இருப்புப்பாதையுடன் ஆற்கோணம் என்னுமிடத்தில் 18¾-மைல் நீளமுள்ள ஒரு கிளை இருப்புப்பாதையால் சேர்க்கப்பட்டிருக்கிறது. இக்கிளை இருப்புப்பாதையில் பாதி இந்தக் காஞ்சிபுரம் தாலூகாவிற்குள்ளேயே செல்கிறது. மேற்குத் திசையில் செல்லும் ரஸ்தா இந்த ஜில்லாவின் வழியாகத் தென்மேற்காகச் சுமார் 37 மைல் தூரம் செல்கிறது. இந்த ரஸ்தாவைச் காஞ்சீபுரத்தின் வழியாகச் செங்கல்பட்டுடன் சேர்க்கும் 25 மைல் நீளமுள்ள இன்னொரு பாதையும் ஏற்பட்டிருக்கிறது. காஞ்சீபுரம் சென்னைக்குத் தென்மேற்குத் திசையில் 45 மைல் தூரத்திலிருக்கிறது.

ஜனங்கள் இந்த ஊரைக் காஞ்சியென்றும் காஞ்சீபுரமென்றும் வழங்குகிறார்கள். இப்பெயர் பிரகாசம் பொருந்திய ஊர் அல்லது தங்க மயமான ஊர் என்பதைக் குறிக்கும். இவ்விடத்தில் இரண்டு ஹைஸ்கூல்களிருக்கின்றன. ஒன்று கிருஸ்துவர்களாலும் மற்றொன்று பச்சையப்ப முதலியார் தர்மத்தாலும் பரிபாலிக்கப்பட்டு வருகின்றன. ஒவ்வொன்றிலும் சுமார் 700-பிள்ளைகள் படிக்கிறார்கள். காஞ்சீபுரம் ஒரு புராதனமான ஸ்தலம். இது சப்தபுரிகளில் ஒன்று. சூரத் நகரத்திற்கு அடுத்ததாகக் கூறலாம். வெகுநாள் அது பௌத்தர்களது நகரமாகவிருந்து பிறகு சமணர்களது ஸ்வாதீனப்பட்டிருந்தது.

கி. மு. இரண்டாம் நூற்றாண்டில் பௌத்த மதம் உன்னதமான நிலைமையி லிருந்தது. ஆயினும் அம்மதம் இருந்த அடையாளம் இப்பொழுது அதிகமாகக் காஞ்சீபுரத்தில் காணவில்லை. இதற்குக் காரணம் பௌத்தர்கள் கிருஷ்ணா ஜில்லாவிலுள்ள அமராவதிதோப்புக்குத்தெற்கே அவர்கள் ஸ்திரமாகத் தங்கியிருந்ததைக் குறிக்கும் யாதொரு வித அங்க அடையாளத்தையும் விட்டுவிட்டுப் போயிருக்கவில்லை என்றதே. ஆனால் ஜெயினர்களோவெனில் காஞ்சீபுரத்தைச் சுற்றியுள்ள நாடுகளில் பிரபலமாக இருந்துவந்தார்கள்.

கலியாணி (Kalyani) நகரத்தைத் தலைமை நகராகக் கொண்டிருந்த சாலுக்கிய வமிசத்திய அரசன் மூன்றாவது புலிகேசி சோழராஜனைஜெயித்துக் காஞ்சிபுரத்தை எரித்ததாகக் கூறப்பட்டிருக்கிறது. இந்த அரசன் இருந்த காலம் கி. பி. 489. பௌத்தர்களை ஹிம்ஸை செய்து அமராவதித்தோப்பை நாசம்செய்ததாகக் கூறப்பட்டஅரசன் இவனே. ஆதலால் அவன் காஞ்சீபுரத்தை எதிர்த்ததும் அந்நோக்கம் கொண்டேயென நினைக்கவும் இடம் தருகிறது. இந்நகரம் புராதனமான தென்பதைக்குறிக்க நமக்கு இன்னொரு தகவலும் கிடைத்திருக்கிறது. கி. பி. 640-ம் வருஷத்தில் பௌத்தம யாத்திரக்காரரான ஹியூன்த்ஸாங் (Hieun Tsang) என்பவர் பௌத்த ஸ்தலமா யிருந்த காஞ்சீபுரத்தைப் போய்ப் பார்த்த விஷயம் கூறப்பட்டுளது.

தென் இந்தியாவிலேயே காஞ்சீபுரம் பெரிய புண்ணிய ஸ்தலம். பிராமணர்களது தலைமையான வாஸ ஸ்தலம். இந்த ஊரை மேன்மையில் காசிக் கொப்பான தென்று கூறுவார்கள். ஸ்தல புராணம் ஒன்றில் கூறப் பட்டுள்ளபடி பார்வதிக்குப் பரமசிவன் காசி, ராமேசுவரம் முதலான புண்ணியபுரிகளும் காஞ்சீபுரமே சிறந்த தென்றும், அதன்குடிகளும், அவ்வூரைப்பார்த்தவர்களும் அதைப்பற்றிக் கேள்வியுற்றவர்களும் மனதில் நினைத்த வர்களும், அதிலுள்ள பசுபக்ஷிகளும் கூட முக்திபெறு மெனக்கூறியிருந்தது ஏற்படுகிறது. ஊரின்மத்தியில் சகல சாஸ்திரங்களையும் ஒரு மாமர ரூபமாகக் கொண்டுதான் ஏகாம்பரநாதர் என்ற பெயர்கொண்ட லிங்காகிருதியாய் பார்வதியுடன் பரமசிவன் அவ்வூரில் இருந்துவருவதால் அங்கு பாபமே ஏற்படாதென்று கூறப்பட்டிருக்கிறது. காஞ்சீபுரம் புராணரீதியாய் ஐந்து யோசனை அதாவது 50-மைல் கிழக்கு மேற்காக விஸ்தீரணம் வாய்ந்துள்ளது.

காஞ்சீபுரத்தில் பதினாயிரம் சிவலிங்கங்களும் ஆயிரம் கோவில்களும் இருப்பதாகக் கூறப்பட்டுளது. எங்கு பார்த்தாலும் சிவலிங்கங்கள் தென்படும். இடிந்தும் இடி யாமலுமிருக்கும் கோவில்கள் பற்பல விடங்களில் இருக் கக் காணலாம்.

இவ்வூரிலுள்ள முக்கியமான கோவில் ஏகாம்பரநாதரது சிவன்கோவில் (படம் 3). இது பெரிய காஞ்சியிலுள்ளது. இங்கு பங்குனிமாதத்தில் 15-நாள் உற்சவம் நடைபெறும்.

பரமசிவன் சிருஷ்டி, ஸ்திதி ஸம்ஹார வேலை நடத்திக் கொண்டிருக்கையில் பார்வதி தேவியார் அவரது கண்களைப் பொத்தினராம். அதனால் கோபங்கொண்ட பரமசிவன் அவரைச் சபித்துப் பிறகு கருணைகொண்டு ஏகாம்பரர்கோவிலிலுள்ள கம்பாநதி குளத்தில் ஆறுமாதம் தபசு செய்யச்சொல்லிப் பிறகு அவளை அங்கீகாரம் செய்து



(படம் 3)—ஏகாம்பரேஸ்வரர் கோவில்

கொண்டனராம். மேற்கூறிய உற்சவம் இந்த சம்பவத்தின் பொருட்டே. இந்தக் கோவிலில் பெரிய கதவுகளிலும் கீழண்டை வாசல் கதவிலும், கோபுரத்திலும், வாயிலிலும் ஹைதர் ஆலியின் குண்டுகள் தாக்கியதால் ஏற்பட்ட அடையாளங்கள் காணப்படும்.

இந்த ஊரிலுள்ள இன்னொரு கோவில் வரதராஜப் பெருமாள் கோவில் (படம் 4). காஞ்சீபுரத்திலேயே மிகவும் செல்வம் பொருந்திய முக்கியமான கோவில். இது சின்ன காஞ்சியிலுள்ளது. இது விஜயநகர ஸமஸ்தானத்தை சேர்ந்த அச்சுதராயர் தமது ராணி வரதா



(படம் 4)—வரதராஜப் பெருமாள் கோவில்.

தேவியுடனும் குமாரர்கள் வெங்கடாத்திரி சிக்க உடையார் இவர்களுடனும் இக்கோயிலுக்கு வந்து அச்சமயத்தில் "மஹாபூத கடதான"த்தைச் செய்தார். கிருஷ்ண தேவராயர் இவ்விடம் வந்து 100 வராகனுக்கு சுவாமி விமானத்தைத் தங்கமுலா மிட்டார். 1701-ல் லாலா தோடர் மல்லர் துலுக்கர் கலககாலத்தில் உடையார்பாளை

யம் கொண்டு போகப்பட்டிருந்த வரதராஜர் விக்கிர கத்தை எடுத்துவந்து புனர்ப்பிரதிஷ்டை செய்தார். இந்த வைபவம் இப்பொழுதும் "உடையார்பாளையம் உத்ஸவ மென" வருஷாவருஷம் கொண்டாடப் படுகிறது.

காமாட்சி அம்மன் கோவில் இன்னொரு முக்கியமான கோவில். திருப்பருத்திக்குன்றத்தில் சமணர்களது கோவில் ஒன்றுளது. முகம்மதியர்கள் இங்கு நெடுங் காலம் இருந்திருந்ததால் ஹிந்துக்களது கோவில்களுக் கருகில் அவர்களது மசூதி ஒன்று ஏற்படுத்தப் பட்டிருக் கிறது. பீஜப்பூரிலிருந்து வந்த ஒரு பக்கிரி புதைக்கப் பட்டிருக்கும் இடத்தை அந்த மசூதி குறிக்கிறதாம்.

இவ்வூரின் அமைப்பைப் பற்றிக் கூறுமிடத்து, இது ஐந்தாறு மைல் நீளம் வாய்ந்தது எனக் கூறலாம். தெருக் கள் அநேகமாய் விசாலமானவைகள். இரு பக்கங்களிலும் தென்னை மரங்கள் வைத்துப் பயிராக்கப்பட்டு அழகாய் விளங்குகின்றன. மேற்கிலுள்ள வேகவதி என்னும் நதி இப்பள்ளத்தாக்கின் செழிப்பிற்குக் காரணமாம்.

சரித்திர விஷயமாகக் கூறுமிடத்து சாளுக்கிய வமிசத் திய புலிகேசி என்பவன் சோழராஜாவை ஜயித்து காஞ்சீ புரத்தைத் தீயிட்டுக் கொளுத்தினர் என்றது ஒன்று. பதி னைகாவது நூற்றாண்டில் இது தொண்டமண்டலத்திற்குத் தலைமை நகரமாக ஏற்பட்டிருந்தது என்றது மற்றொன்று. 1044-வது வருஷத்தில் விஜயநகர ராஜியம் க்ஷீணித்ததும்

இது கோல்கொண்டா அரசர்களிடமிருந்து பிறகு முகம்மதியர்கள் வசமாகி ஆற்காடு ராஜ்யத்தின் பாகமாக ஏற்பட்ட விஷயம் கூறப்பட்டுளது. பிரெஞ்சுக்காரரிடமிருந்து கிளைவினல் (Clive) 1751-வருஷம் பிடித்துக் கொள்ளப்பட்ட விடம் இது. அதே வருஷத்தில் ராஜா சாஹேபால் ஜெயித்துக்கொள்ளப்பட்டு மறுபடியும் 1752-ம் வருஷத்தில் கிளைவினல் அடையப்பட்டதாம். 1757-வது வருஷத்தில் பிரெஞ்சுக்காரர்கள் கோவிலைப் பிடிக்க முயன்றது பயன்படாது இவ்வூரை நெருப்பிட்டுக் கொளுத்தினர். 1758-வது வருஷத்தில் பிரெஞ்சுக்காரர்கள் சென்னையை பிடிப்பார்களென்று எதிர்பார்த்து இந்த ஊரைக் காலிசெய்து கொண்டு போய், மறுபடியும் 1759-வது வருஷத்தில் பிரெஞ்சுக்காரரிடமிருந்து திரும்பவும் அடைந்தார்களாம். இது ஹைதர் ஆலியால் 1780-வது வருஷத்தில் கொள்ளையடிக்கப்பட்ட இடம். கருங்குழிக்குப் பிறகு இது கலெக்டரது தலைமை யிருப்பிடமாக 1825-வது வருஷத்தில் ஏற்பட்டு அதுமுதல்1883-வது வருஷம்வரை அப்படியே இருந்துவந்தது. அதற்குப் பிறகு 30-வருஷம் கலெக்டர் ஆபிசு ரிக்கார்டுகளையும் கஜானவையும் வைத்திருந்த இடமாகவு மிருந்தது.

மத சம்பந்தமாக இந்த இடத்தைச் சமணகாஞ்சி, சிவ காஞ்சி, விஷ்ணுகாஞ்சி என மூன்று பிரிவுகளாகப் பிரித்திருக்கின்றார்கள். சமணகாஞ்சியி லுள்ள கோவிலில் பௌத்த விக்கிரகம் ஸ்தாபிக்கப்பட்டுளது. சிவன்

கோவிலில் உள்ள லிங்கம் பிருதிவி லிங்கம். இங்குள்ள கோபுரம் இந்தியாவிலுள்ள பெரிய கோபுரங்களிலொன்று.

இந்த ஊர் நெசவுக்கும் பெயர் போனது. தவிர பித்தளை தாமிரத் தகடுகளினால் சாமான்கள் செய்யும் தொழிலாளிகளு மிருக்கின்றார்கள்.

இங்கு பிரக்யாதி பெற்ற பக்சையப்ப முதலியாரது தர்மக் கலாசாலை ஒன்று ஏற்பட்டிருப்பதுமன்றி அநேக சத்திரங்களும் ஏற்பட்டிருப்பதிலிருந்து "காஞ்சீபுரம் போனால் காலாட்டி உண்ணலாம்" என்ற பழமொழியும் ஏற்பட்டிருக்கிறது.

மூன்றாவது குலோத்துங்கன் கி. பி. 1201-1202-ல் காஞ்சியைக் கைப்பற்றினார். ஆனால் 1196-லேயே இவர் தான் வடதேசத்திலுள்ளபல ராஜாக்களை ஜயித்துக் காஞ்சி மாநகரத்தில் பிரவேசித்ததாகத் தெரியவருவதால், வெகு காலமாய்ச் சோழர்களிடமிருந்து இந்நகர் 1196-க்கு முன் சிலகாலம் இவர்களிடமிருந்து நீங்கிவிட்டதாக ஏற்படுகிறது. 1723-ல் இவ்விடத்தில் கர்னாடக துலுக்க நவாபின் பிரதிநிதியாகவிருந்த சிதக்கொணிராயர் அம்பி கிராமத்திலுள்ள நதியிலிருந்து சர்வதீர்த்த குளத்திற்கும் வரதராஜர் கோவிலுக்குள்ளுள்ள அனந்தசரஸ் குளத்திற்கும் பூமிக்குள்ளே கால்வாய் வெட்டி ஜலம் பாய்ச்ச ஏற்பாடு செய்த விஷயம் மெச்சத்தக்கது.

திருக்கழுக்குன்றம் (Tirukalukuntam). இது தென் இந்தியாவின் பிரக்யாதிபெற்ற சைவ யாத்திரை ஸ்தலங்களில் ஒன்று. இது செங்கல்பட்டுக்குத் தென்கிழக்கில் ஒன்பது மைல் தூரத்திலும், மஹாபலிபுரத்திற்கு மேற்கில் பத்துமைல் தூரத்திலும் இருக்கிறது. இது இருக்கும் பிராந்தியம் தமிழ்நாட்டின் முக்கிய ராஜதானிகளில் ஒன்றாகிய தொண்டமண்டலத்தின் ஒரு பாகமாகும். மேற்கூறிய தொண்டமண்டலம் வடக்கில் காளஹஸ்தியை எல்லையாகவும், கிழக்கில் வங்காளக் குடாக்கடலை எல்லையாகவும் தெற்கிலும்மேற்கிலும்முறையே பெண்ணையாற்றையும் திருவண்ணுமலையையும் எல்லைகளாகவும் பெற்றிருந்தது. தவிரவும் அது 24 பிரிவுகள் வாய்ந்த பிராந்தியம். ஒவ்வொரு பிரிவும் ஒவ்வொரு கோட்டம் எனப்பட்டிருந்தது. திருக்கழுக்குன்றம் களத்தூர்க் கோட்டத்தி லிருந்தது.

தென் இந்தியாவிலுள்ள அனேக கோவில்களைப் போலவே திருக்கழுக்குன்றமும் அனேகம் பெயர்கள் வாய்ந்துளது. அவைகளுள் மிகச் சாதாரணமானது. "பட்சிதீர்த்தம்" என்று ஜனங்களால் வழங்கப்படும் பெயர். மலையின் உச்சியிலுள்ள பட்சிதீர்த்தமென்ற குளத்தினின்றும் அப்பெயரை இட்டார்கள் போலும். அக்குளத்தின் அருகில் வெகுகாலம் தொட்டு அங்கிருக்கும் பண்டாரம் கொடுக்கும் ஆகாரத்தை உண்ணுமாறு பிரதிதினமும் இரண்டு கழுகுகள் வந்திறங்குவ துண்டு. (படம் 5). இந்த ஸ்தலத்தின் இன்னொரு சாதாரணமான பெயர் "ருத்திர கோடி." இதுவும் ஒரு புராணத்தில்

கூறப்பட்டுள்ள விஷயம். ஒரு கோடி ருத்திரர்கள் வேத கிரீசுவரரை இங்கு பூசித்ததாகக் கூறப்பட்டுளது. புராண சம்பந்தமுள்ள இன்னும் இரண்டு பெயர்களும் இந்த ஸ்தலத்திற்கு உண்டு. அவை "ஆதிநாராயணபுரம்," "வேதகிரி" என்பவை.



(படம் 5)—கழுகு சாப்பிடுதல்.

திருக்கழுக்குன்றிலுள்ள நான்குமலைகள் நான்குவேதங்களைக் குறிக்கின்றன என்பது ஜனங்களது நம்பிக்கை. ஒவ்வொரு குன்றும் ஒவ்வொரு வேதத்திற்கேற்பட்டு முதல் குன்று ரிக்வேதத்தையும், இரண்டாவது குன்று யஜுர் வேதத்தையும், மூன்றாவது குன்று சாமவேதத்தையும், நான்காவது குன்று அதர்வண வேதத்தையும் குறித்து நிற்கின்றன என்றது பல்லோரதுநம்பிக்கை. இக்கடைசிக் குன்றின் உச்சியில்பரமசிவன் வீற்றிருக்கிறார்.

மேற்கூறியுள்ள குன்றுகளில் அதிக உன்னதமான குன்றின்மேலேதான் வேதகிரீசுவரது கோவில் அமைந்திருக்கிறது. ஊரின் வடக்கில் அமைக்கப்பெற்று, நான்கு மலைச் சிகரங்களும் தெற்கு வடக்காகப் பரவி மேற்குப் பக்கத்தில் உட்கவிந்த தோற்றம் வாய்ந்துள்ளன. இம்மலைத் தொடர்ச்சி முழுவதிலும் முக்கியமாய் அதர்வண சிகரமென்ற இடத்தில் பற்பல மருந்துச் செடிகொடிகள் அகப்படுகின்றன. பச்சைப் பசேரென்றிருக்கும் மலைச்சரிவுகளின் வழியாக வீசும் இளங்காற்று மேற்கூறியுள்ள ஔஷதிகளின் வாசனைகளைச் சுமந்து வருவதால் அனேக யாத்திரிகர்கள் நோய்கள் தீர்ந்து பலம் பெறுகிறார்கள். இக்குன்றின் வடமேற்கு ஓரம் சஞ்சீவித் தொடர் என்றபெயர் வாய்ந்துளது. பிரதக்ஷணம் வரும் யாத்திரிகர்கள் இங்கு தங்கி நின்று, ஆனந்தமாய்க் காற்று வாங்குவதும் ஸஹஜம். தவிரவும் ஒரு மண்டலம் அல்லது நாற்பதுநாள் ஸ்தலவாசம் செய்யவேண்டுமென்று கூறப்பட்டிருப்பதை அதிகரித்தே தங்கியிருக்கவேண்டுமென்று யாத்திரிகர்கள் விரும்புகிறார்கள்.

இம்மலை 264 ஏகரா விஸ்தீரணத்தை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறது. மலையைச் சுற்றி ஏற்பட்டிருக்கும் பாதை பிரதக்ஷண பாட்டை எனப்படும். அது ஒன்றேகால் மைல் தூரமுள்ளது. பிரதி காலையிலும் மாலையிலும் யாத்திரிகர்கள் இப்பாட்டையின் வழியாக கிரிப்பிரதக்ஷணம் வருவதுண்டு. பன்னிரண்டு வருஷங்களுக் கொருதரம் இந்திரன் இங்குள்ள கோவிலுக்கு வருவதாகவும் அப்பொழுது கோவிலுக்குள்ளே யாவது அதன் சமீபத்திலாவது மின்

னல்ஒளியுடன் இடிவிழுமென்றும் ஜனங்களுக்குள் ஒரு நம்பிக்கை ஏற்பட்டுளது. அப்படி இரு தடவைகளில் இடி விழுந்தது குறிக்கப்பட்டிருக்கிறது. ஒன்று 1889-வது வருஷத்திலும்; மற்றொன்று பன்னிரண்டு வருஷங்களுக்குப் பிறகு 1919-வது வருஷத்திலும்ஏற்பட்டதாம். மேற்கூறிய இருதடவைகளிலும் கோவிலின் எந்த பாகத்திற்கும் கெடுதி நேரவில்லை. மேற்கூறிய இடி கோவிலில் உள்ள லிங்கத்தை மூன்றுதரம் சுற்றிப் பிறகு பூமியில் மறைந்துபோகிற தென்பது ஐதீகம்! இடி விழுந்த இடமென்று ஒருதுவாரம் யாத்திரிகர்களுக்குக் காட்டப்பட்டு வருகிறது. இந்திரன் சிவபெருமானை இடியினால் அபிஷேகம் செய்கிறானாம்.

அடிவாரக் கோவிலில் ஒரு மண்டபம் உண்டு. இதில் அழகிய உருவங்கள் செதுக்கப்பட்டிருக்கக் காணலாம். தூண்களில் செதுக்கிவைக்கப் பட்டிருக்கும் மேற்கூறிய உருவங்கள் அடிவாரத்திலுள்ள கோவிலின் தொடக்கத்தைப்பற்றிய விவரங்களைக் காட்டுகின்றன. சுரகுரு என்ற சோழராஜன் அநேகம் யானை, குதிரை, ஒட்டகங்களுடன் வேட்டைக்குப்போய் ஒரு முள்ளம்பன்றியை வேட்டையாடிக் கொல்வதைக் குறிக்கின்றன. கொல்லப்பட்ட முள்ளம்பன்றியிலிருந்து ஒருவன் உண்டாகிறான். அரசன் தெரியாமல் ஒரு பசுவைக்கொன்றதும், அப்படிக் கொல்லப்பட்ட பிராணியிலிருந்து ஒரு கன்னிகை ஆவிர்ப்பவிப்பதும் காட்டப்பட்டிருப்பதுடன், மூன்றாவது உருவத்தில் அரசனது மந்திரியாகிய தனது யஜமானனை ஒரு நாய் க்ஷேமச்செல்

வது காணப்படும். தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள திருவாரூரில் சோழ அரசர்களது வமிசத்தைச் சேர்ந்த ஒரு அரசகுமாரன், தனது தேரை ஓட்டிச் செல்கையில் ஒரு பசுவின் கன்றை நசுக்கிக் கொன்றதினுல் விசனமுற்ற தாய்ப் பசு அரண்மனையில் கட்டித் தொங்கவிட்டிருந்த மணியை ஆட்டித் தனது கஷ்டத்தையும், அரசகுமாரனுல் நேரிட்ட விபத்தையும் அரசனுக் கறிவித்து நியாயம் பெற்றதாகக் கூறப்பட்டுளது. அதுபோல இவ்வரசனும் தான் தெரியாமல் செய்த கோஹத்தி பாபத்தை நிவர்த்தி செய்து கொள்ளச் சோழ அரச குமாரன் தேர்க் காலில் நசுக்கப்பட்டதாகக் கூறப்பட்டிருந்தது போல் தானும் நசுக்கிக் கொல்லப்படத் தயாராஞன். அப்பொழுது அவ்வரசனது கோஹத்தி தோஷம் ஒரு காக்கை வடிவாக அரசனது தலையின் வழியாகக்கிளம்பிப் புண்ணிய கிரியாகிய வேதகிரியின் தென்மேற்கில் விழுந்து உடனே கல்லாகச் சமைந்து போயிற்ரும்! இப்பொழுதும் அக்கல் லுருவம் காக்கைக் குன்றென்ற பெயருடன் இருந்து வருகிறது. இக்குன்று பாபரூபம் என்பதை நிரூபிப்பதற்காகவே மற்றெல்லா விடங்களும் செழித்திருக்க இங்கு யாதொன்றும் பயிராவதில்லை யென்பது ஜனங்களின் அபிப்பிராயம்.

சுரகுரு என்றவன் மாமல்லாபுரத்தில் ஆண்ட சோழ ராஜாக்களில் ஒருவன் என்றும், அவன் தான் குடியிருக்கக் கொத்தமங்கலத்திற் கருகிலுள்ள இரும்பிலி தட்டாரா மலைக் கிடையிலிருக்கும் பள்ளத்தாக்கில் திருக்கழுக்குன்

றத்தின் சமீபத்தில் வசதி ஏற்படுத்திக் கொண்டானும். கொத்தமங்கலத்திற கருகில் காணப்படும் ராஜன் தாங் கல், நாச்சிமேடு என்ற இரண்டு ஸ்தலங்களும் அரசன் கூடார மடித்துக்கொண்டிருந்த இடங்களென்று காட்டப் பட்டு வருகின்றன. பக்தவத்ஸலர் கோவிலில் ஏற்பட் டிருக்கும் சிலாலிகிதம் திருக்கழுக்குன்றத்தை உலகத்தை ஆளும் சோழனது நகரம் என்னும் பொருள் வாய்ந்த "உலகளந்த சோழபுரம்" என்று கூறப்பட்டுளது.

பக்தவத்ஸலர் கோவிலின் கிழக்கு வாயிலில் ஆரம்ப மாகிச் செல்லும் ரஸ்தாவின் முடிவில் இருக்கும் சங்க தீர்த்தம் என்ற திருக்குளம் இங்கு விசேஷமான புண் ணிய தீர்த்தம். அது 760-அடி நீளம் 560-அடி அகலம் விஸ்தீரண முள்ளது. இக்குளத்திற்கு எதிராக ஒரு விநாயகர் கோவில் இருக்கிறது. குளத்தின் மத்தியில் ஒரு அழகிய மண்டப மிருக்கிறது. இக்குளத்திற்கு ஜலம் பெரும்பாலும் குன்றினின்றிழியும் சிற்றாறுகளிலிருந்தே வருகிறது. இந்த ஜலம் வியாதிகளைச் சொஸ்தமாக்கும் குணம் வாய்ந்ததென நினைக்கிறார்கள். இக்குளத்தில் பன் னிரண்டு வருஷத்திற்கொருமுறை சங்கு தோன்றுகிறது. அதனைக்கார்த்திகை கடைசி சோமவாரதினத்தில் அபி ஷேகபாத்திரமாக உபயோகிக்கிறார்கள். இந்தச் சங்கா பிஷேகம் விசேஷமானது.

மஹாபலிபுரம் (Mahabalipuram). இது சதுரங்க பட்டணத்திற்கும், கோவளம் (Covelong) என்னுமிடத் திற்கும் நடுவி லிருக்கிறது. (படம் 6). கீழ்கரைக் கால்



(படம் 6)---மஹாபலிபுரம்

வாய்க்கும் சமுத்திரத்திற்கும் இடையி லுள்ளது. இதை மஹாபலிபுரமென்றும், மாவலிபுரமென்றும், மல்லை புரமென்றும், மாமல்லபுரமென்றும், மல்லாபுரமென்றும் அழைப்பதுண்டு. கடைசியாகக் குறித்துள்ள இருபெயர் களே இவ்வூரின் சரியானபெயரெனக் கொள்ளலாம். சிலர் இவ்வூரை மஹாபலி சக்கிரவர்த்தியினது ஊரென நினைக்கி ருர்கள். சிலர் பெரிய பரிசுத்தமான குன்றுள்ள இட மெனக் கொள்ளும் பெயரே தகுந்ததெனக் கொள்கிருர் கள். இவ்வூர் சென்னைக் கருகி லிருப்பதால் இந்த நாட் டிற்கு வரும் ஒவ்வொருவரும் வந்து பார்த்துவிட்டுப் போகிருர்கள். இங்குள்ள கல்ரதங்கள் முக்கியமாகப் பார்க்கத் தகுந்தவை.

கர்நாடகத்தின் இந்த பாகம் பல்லவ வமிசத்து ஆரம்பத்தில் அரசர்களால் அவர்களது முக்கிய துறை முகப்பட்டினமாக ஏற்பட்டிருந்த இடம். அவர்களது பிரதான நகரம் காஞ்சி. சோழராஜாக்கள் இந்த பாகத்தை ஜெயிக்கு முன் இங்கு பல்லவர்களும், குரும்ப ஜாதியார்களும் வசித்து வந்தார்கள். இது முதலாழ் வார்களாகிய மூவருள் பூதத்தார் அவதரித்த ஸ்தலமாகும்.

பல்லவ அரசர்களில் முதலாவது நரஸிம்ம வர் மனுக்கு "மஹாமல்ல" னென்று பட்டம் ஏற்பட்டதி லிருந்து இதற்கு "மாமல்லபுர" மென்றும் "மஹாமல்ல புர" மென்றும் அவரது 7-வது நூற்றுண்டிலிருந்து பெயர் ஏற்பட்டிருக்கலாம். பின்னர் மேல்நாட்டு ஐரோப்பியர் கள் கப்பலில் சமுத்திர மார்க்கமாய் வரும்போது இவ்

விடம் கோயில்களில் ஏழு ஸ்தூபிகளை ஏககாலத்தில் பார்த்ததிலிருந்து இவ்வூருக்கு ஏழு கோயில் (Seven Pagodas) எனப் பெயரிட்டிருக்கலாம். இதற்குத் "தையூ" ரென்றும் தலைசயனபுர மென்றும் கூடப்பெயர்.

இவ்வூரிலுள்ள மலையில் செதுக்கப்பட்டிருப்பவைகளில் முக்கியமானவை ஐந்து ரதங்க ளெனப்படும். கோயில்கள் சமுத்திரக் கரையிலுள்ள அலைவாய்க்கரைக் கோயில், அர்ஜுனன் தபஸ் எனப்படுவது, ஸ்ரீகிருஷ்ண பகவான் கோவர்த்தன மலையைக் குடையாகப்பிடித்து யாதவர்களைக் காப்பாற்றுவது முதலியவை. அவைகள் செங்கற்பட்டு ஜில்லாவிலுள்ள நல்லாத்தூர் ஜமீன்தாரைச் சேர்ந்தவைகளாயிருந்தன. 1885-ல் அவைகளைச் சரிவர பரிபாலிக்கும் பொருட்டு ஜமீன்தார் கவர்மெண்டாருக்கு இனமாகக் கொடுத்தார். ஆனால் ஜமீன்தாரைச் சேர்ந்த சொத்தை இனமாக வாங்கிக்கொள்வது சட்ட விரோதமென்று அவைகளை ஒரு விலை ஏற்படுத்தித் தாங்கள் சேர்த்துக்கொண்டதாக அரசாங்கத்தார் ஏற்பாடு செய்தார்கள். இந்த நல்லாத்தூர் ஜமீன்தாருக்கு, முகம்மதிய சர்க்காரால் அவர்களுக்கு அக்காலத்தில் உதவிபுரிந்ததின் நிமித்தியம் அளிக்கப்பட்டது. 1802-ல் இது கிளைவிடமிருந்து (Clive) இவர்களுக்கு சந்நது (Sannad) கிடைத்தது.

உத்தரமல்லூர் (Uttaramallur). இதற்கு உத்தரமேரு ரென்றும் பெயர். இது சென்னைக்கு 43-மைல் தென் மேற்கிலுள்ளது. இவ்விடத்தில் போர்டு ஹைஸ்கூல் ஒன்று இருக்கிறது. இது மதுராந்தகத்திற்கு மேற்கில் இருக்கிறது.

இங்குள்ள வைகுண்டப்பெருமாள்கோயிலில் கி.பி. 900-940 வருஷங்களில் ஆண்ட முதலாவது பராந்தக சோழனது சிலா சாசனங்கள் இருந்துவருகின்றன. இச்சோழராஜன் தான் சிதம்பரத்திலுள்ள ஸ்ரீ நடராஜகோவிலின் மேற்கூரைச் செம்பு ஓடுகளுக்குத் தங்கமுலாம் பூசிவைத்தவர் ராஜசிம்ஹ பாண்டியனை ஜெயித்ததும், இலங்கைத் தீவைக் கைப்பற்றியதும் இவரது காலத்தில் தான். இவரது பன்னிரண்டாம் வருட ஆட்சியில் துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனம் செய்யப் பஞ்சாயத்து ஏற்பட்டு, இக்கிராமம் ஜனங்களாலேயே சில விதிகளை அநுசரித்து ஆண்டுவரப் பட்டுவந்த விஷயம் கூறப்பட்டுளது. அப்பஞ்சாயத்தில் ஸ்திரீகளும் இருந்தார்களாம். பெருங்கருணையாட்டி என்றும், தேவர்கள் அம்மையார் என்றும் பெயர்கொண்ட ஒரு மாது அத்தகைய பஞ்சாயத்தி லிருந்ததாகத் தெரிகிறது. பஞ்சாயத்து சபை பிரதிவருஷமும் வருஷமேற்பார்வை, தோட்ட மேற்பார்வை, குளத்து மேற்பார்வை முதலியவைகளைச் செய்யச் சபைகளை ஏற்படுத்த, ஏற்படுத்திக்கொண்ட விதிகள் அல்லது நிபந்தனைகளாவன:—

(1) உத்தரமல்லூர் முப்பது பிரிவுகளாகப் பிரிக்கப்பட வேண்டும்.'

(2) ஒவ்வொரு பிரிவிலுள்ளவர்கள் கூடிக் குடவோலைக்காகப் பெயர்வழிகளைத் தெரிந்தெடுக்கவேண்டும்.

(3) குடஓலை வாயிலாக வாக்கு (Vote) பெறுவதற்கு ஒருவனுக்கு அடியிற் குறிக்கப்பட்டுள்ள யோக்கியத்தை ஏற்பட்டிருக்கவேண்டும். அவையாவன:—(1) அவ

னுக்குக் கிஸ்தி செலுத்தும் நிலம் கால்வேலிக் கதிக மிருக்கவேண்டும். (2) தனக்குச் சொந்தமான நிவேசனத் திலேயே அவனுக்கு வீடு ஏற்பட்டிருக்கவேண்டும். (3) அவனுக்கு வயது முப்பத்தைந்திற்கு மேற்பட்டு எழுபதுக் குள்ளாக இருக்கவேண்டும். (4) அவனுக்கு மந்திரபிராம் ஹணம் தெரிந்திருக்க வேண்டியது என்பதுடன், அதைப் பிறருக்குப் போதிக்கும் திறமையும் ஏற்பட்டிருக்க வேண் டும். (5) ஒருவனுக்கு அரைக்கால் வேலி நிலம் மாத்திரம் இருந்தபோதிலும் கூட அவனுக்கு ஒரு வேதமும் நான்கு பாஷியங்களில் ஒன்றும் தெரிந்தும், அவைகளைப் பிறருக்குப் போதிக்கும் திறமைமாத்திரம் வாய்ந்திருந் தால் போதும். அவனது பெயரை குட ஓலை யோக்கி யதையில் வரைந்து (6) மேற்கூறிய யோக்கியதை வாய்ந் துள்ளவர்களுள் பிந்திய யோக்கியதையும் வாய்ந்திருந் தால் ஒழிய அவர்கள் தெரிந்தெடுக்கப்பட மாட்டார் கள். (1) வேலை நன்கு தெரிந்திருக்கவேண்டியது என் பதுடன் ஏற்பட்டுள்ள பரிசுத்தமான சட்ட நிபந்தனை களின்படி அவர்கள் நடந்துகொள்ள வேண்டும். (2) அவர் களது சொத்துக்கள் நியாயமான வழியில் சம்பாதிக்கப் பட்டிருக்கவேண்டும் என்றதுடன் அவர்களது மனம் பரிசுத்தமாயும், சென்ற மூன்று வருஷங்களில் அவர்கள் மேற்கூறியுள்ள சபைகளில் எதிலுமே இருந்திராமலு மிருக்கவேண்டும். (7) மேற்கூறிய சபைகளில் அங்கத்தி னர்களாக இருக்கமுடியாதவர்கள் (1) சங்கங்கள் ஏதாவது ஒன்றில் இருந்து கணக்கு ஒப்புவிக்கத் தவறியவர்களுள் பின்னர் கூறியுள்ள அவர்களது பந்துக்களுள் இவர்களது

பெயர்கள் குட ஓலேயில் வரைந்து குடத்தில்போடப்பட மாட்டாது. கணக்கு ஒப்புவிக்கத் தவறியவர்களது பந்துக்கள் யார் யாரென்ருல் அத்தகையவர்களது (1) தாயாரின் சகோதரிகளின் குமாரர்கள் (2) தகப்பன் பக்கத்திய அத்தைகள் தாய்ப்பக்கத்திய மாமன்மார்களது குமாரர்கள் (3) தாயாரது சகோதரர்கள் (4) தகப்பஞரது சஹோதரர்கள் (5) சகோதரர்கள் (6) மாமஞர் (7) மைத்துனர்கள் (8) சஹோதரிகளின் கணவர்கள் (9) சஹோதரிகளின் குமாரர்கள் (10) மாப்பிள்ளேகள் (11) தகப்பஞர்கள் (12) குமாரர்கள்.

(2) நியாய விரோதமாய் ஸ்திரீ ஸம்போகம் செய்தவர்களும், பிரம்ஹத்தியாதி பஞ்ச மகா பாதகங்ளில் ஏதொன்றையும் செய்திருந்தவர்களும் (பஞ்சமஹாபாபங்கள் (1) பிரம்மஹத்தி (2) மதுபானம் (3) திருட்டு (4) ஆசாரியரது மனேவியைப் புணர்தல் (5) மேற்கூறிய குற்றங்கள் செய்துள்ளவர்களுடன் சேர்ந்திருந்தவர்கள்) தகுதியானவர்கள் அல்ல. தவிர மேற்கூறியவாறு பன்னிரண்டு விதமாக இவர்களுக்கு பாந்தவியம் வாய்ந்திருந்தவர்களும் கூடக் குடஓலேயில் பெயர்வரைந்து குடத்தில்போட லாயக்கானவர்கள் அல்ல.

ஜாதிப் பிரஷ்டனுக்கப்பட்டு விதித்துள்ள பிராயச்சித்தம் முதலியவைகளேச் செய்து கொள்ளாதவனும் லாயக்கானவன் அல்ல. குண்டுதைரியம் வாய்ந்திருந்தவர்கள் அல்லது மற்றவர்களது சொத்துக்களேக் களவாடியவர்கள் லாயக்கானவர்கள் அல்ல. புசிக்கக்கூடாதவைக

ளைப் புசித்திருந்தவர்கள் பிராயச்சித்தம் முதலியவைகளைச் செய்து கொண்டிருந்தபோதிலும் லாயக்கானவர்களாகக் கருதப்படாது. பரஸ்திரீயைப் புணர்ந்தவர்களும், கிராம கலகக்காரர்களும், என்ன பிராயச்சித்தம் தான் செய்து கொண்டிருந்த போதிலும் லாயக்கானவர்கள் அல்ல.

மேற்கூறிய லாயக்கில்லாதவர்களை நீக்கியபிறகும் மற்ற முப்பது பிரிவுகளிலுமுள்ள லாயக்காக இருப்பவர்களது பெயர்கள் குட ஓலைத் துண்டுகளில் எழுதப்படவேண்டும். அத்துண்டுகள் ஒவ்வொரு கிராமப்பிரிவுகளுக்கும் ஒவ்வொரு கட்டாக ஏற்படவேண்டும். மேற்படி கட்டுகள் ஒரு குடத்துக்குள் போடப்படவேண்டும். பிறகு இதற்கென்றே கூட்டப்பட்ட கிராமசபைக்கு முன் ஒவ்வொரு கட்டும் தனித்தனியாகக் குலுக்கி ஒவ்வொரு சீட்டு மாத்திரம் ஒரு சிறுவனால் எடுக்கச் செய்யப்பட்டு அதில் யார் பெயர் இருக்கிறதோ அவன் தெரிந்தெடுக்கப்படுவது வழக்கம். மேற்கூறியவாறு முப்பது கட்டுகளையும் குலுக்கி 30-பேர்கள் தெரிந்தெடுக்கப் படுவார்கள். அப்படித் தெரிந்தெடுக்கப் பட்டவர்களுள் முன் தோட்ட விசாரணைச் சங்கம், குளவிசாரணைச் சங்கம் இவைகளில் இருந்து அனுபவம் வாய்ந்துள்ளவர்களும், நன்கு கற்றறிந்தவர்களும், வயது முதிர்ந்தவர்களும், வருஷமேல் விசாரணைச் சங்கத்தாராகத் தெரிந்தெடுக்கப் படுவார்கள். பாக்கி யிருப்பவர்களில் பன்னிரண்டு பெயர்கள் தோட்ட மேல்விசாரணைச் சங்கத்தின் அங்கத்தினர்களாகத் தெரிந்தெடுத்துக் கொள்ளப்படுவார்கள். பாக்கியிருக்கும்

ஆறுபேர்களும் குளமேல்விசாரணைச் சங்கத்தின் அங்கத்தினர்கள். கடைசியாக்க் கூறியுள்ள இருசங்கங்களின் அங்கத்தினர்கள் வாயால் அபிப்பிராயம் கேட்டறிந்து கேட்டுத் தெரிந்தெடுக்கப் படுவார்கள். மேற்கூறியுள்ள மூன்று சங்கத்திலுமுள்ள பெரியோர்கள் 360 நாட்கள் அதிகாரம் வகித்துப் பிறகு விலகி விடுவார்கள். மேற்கூறிய அங்கத்தினர்கள் மீது குற்றம் ஏற்பட்டால் அவர்கள் உடனே அகற்றிவிடப் படுவார்கள். முதலில் ஏற்பட்ட சங்கத்தவர்கள் தங்களது அதிகார நாட்கள்கழிந்து விலகினதும் புதிதாகச் சங்கங்கள் ஏற்படுத்தப்பட வேண்டு மல்லவா? நியாய மேன்பார்வைச் சங்கத்தவர்கள் ஒரு சபை கூட்டுவார்கள். ஒரு மத்தியஸ்தர் ஏற்படுத்தப்படுவார். அச்சபைகூட்ட முன்செய்தது போலவே குட ஓலைச்சீட்டுகள் கொண்டு சங்கங்களின் அங்கத்தினர்கள் தெரிந்தெடுக்கப் படுவார்கள். தவிரவும், சங்க மேன்பார்வைக்காக முன் கூறியுள்ளவாறு 30 பெயர்கள் தெரிந்தெடுக்கப்பட்டு இவர்களிலிருந்து 12 பெயர்கள் பொறுக்கி எடுக்கப்படுவார்கள். அப்படிப்பொறுக்கி எடுக்கப்பட்டவர்களுள் 6 பெயர் அந்தரங்க மேற்பார்வைச் சங்கத்தின் அங்கத்தினர்களாகவும், பாக்கி ஆறு பெயர்கள் "பஞ்சவாரவாரியம்" என்ற சங்கத்தின் அங்கத்தினர்களாகவும் ஆவார்கள். மறு வருஷங்களில் மேற்கூறியுள்ள இரு சங்கங்களும் ஏற்படும்பொழுது முந்தியே அங்கத்தினர்களாக ஏற்பட்ட நகரப் பிரிவுகளிருந்து எடுக்கப்படும் அங்கத்தினர்கள் விலக்கப்படுவார்கள். கழுதை ஏறிச் சவாரி செய்தவர்களும், பொய்க்கையொப்பமிட்டவர்களும்

குட ஓலையில் தங்கள் பெயர்கள் தாக்கல் செய்யப்படத் தகுந்தவர்கள் அல்ல.

பஞ்சாயத்தார்களும், தங்களது திரவியங்களை யோக்கியமான வழியில் சம்பாதித்துள்ளவர்களும் தான் கிராமத்திய கணக்குகளை எழுதலாம். கணக்குகளை எழுதிக் கொண்டிருந்தவன் தனது காலத்திய கணக்குகளை, அக் கணக்குகளுக்கு உத்தரவாதமான பெரிய சங்கத்தின் அங்கத்தினர்களுக்கு முடித்து ஒப்புவித்தால் ஒழிய மறுபடியும் அவ்வேலை அவனுக்குக் கொடுக்கப்பட மாட்டாது. தவிரவும் அவன் யோக்கியனாக இருக்க வேண்டும்.

ராஜ நிருபம் "இந்த வருஷம் முதல் சூரிய சந்திரர்கள் உள்ளளவும சங்கங்கள் குடஓலை மூலமாய் ஏற்படுத்தப்படவேண்டும்" என்று அளிக்கப்பட்டிருந்தது.

மேலே கூறியுள்ள யோக்கியதா கிரமம் இரண்டு வருஷங்களுக்குப் பிறகு மாறுதலடைந்த கிரமம். முதலில் ஏற்பட்டிருந்தது யாது காரணம் கொண்டோ மாற்றப் பட்டது. அனுபவத்தில் குறைகள் காணப்பட்டதால் அப்படிச் செய்யப்பட்டிருக்கவும் கூடும். கெட்டவர்கள் ஒழிந்து நல்லவர்கள் க்ஷேமமாக இருக்கவேண்டுமென்பது நோக்கம். அது நிறைவேற முடியாம லிருந்திருக்கவும்கூடும். எப்படிப்பட்டவர்கள் கெட்டவர்கள் என்று நிர்ணயித்தகற்ற ஹேது வில்லை. படித்துள்ளவர்களையும், நற்குணம் வாய்ந்துள்ளவர்களையும் தெரிந்தெடுப்பது எங்ஙனம் என்றதும் நிர்ணயப் பட்டிருக்கவில்லை. மேற்கூறிய

குறைகளையும் இன்னம் அநேகம் குறைகளையும் அகற்ற யோக்கியதைக் கிரமம் மாற்றப்பட்டிருக்கவும் கூடும்.

வருஷ மேற்பார்வைச் சங்கத்தின் வேலை அதன் பெயரிலிருந்து ஏற்படவில்லை. நியாய மேற்பார்வைச் சங்கம் பிந்தியதில் கூறப்பட்டிருப்பதிலிருந்தும் அது ஏற்படவேண்டிய நிபந்தனைகள் நிர்ணயிக்கப்படாமலிருந்ததிலிருந்தும், வேறுசங்கத்தின் பாகமாக அதுஇருக்கவேண்டுமென்றது ஏற்படுகிறது.

மேற்கூறியுள்ள பஞ்சாயத்தின் ஒவ்வொரு அங்கத்தினரும் தனது அதிகார காலம் முடியும் தருவாயிலாவது அல்லது முடிந்த உடனாவது கிராம சமூஹத்திற்குத் தங்கள் வேலையைப் பற்றிக் கணக்கு ஒப்புவிக்கவேண்டும். தவறினால் ஜாதிப் பிரஷ்டர்களாவார்கள்.

திருவள்ளூர் (Tiruvellur) என்றது அப்பெயருள்ள தாலுக்காவின் முக்கியமான ஊர். இது ராஜதானி நகருக்கு முப்பது மைல் மேற்கிலும், ரயில் ஸ்டேஷனுக்கு இரண்டு மைல் வடக்கிலு மிருக்கிறது. அது தாசில் தாரது ஸ்திரமான இருப்பிடம். அவரது கச்சேரியும் கஜானாவும், சப்ஜெயிலும் இங்கே ஏற்பட்டிருக்கின்றன. அது ரயில் ஸ்டேஷனுக்கும் ஊருக்கும் இடையில் இருக்கிறது. தவிர இந்த ஊரில் ஒரு ஜில்லா முனிஸீப்கோர்ட்டும் ஒரு ரிஜிஸ்டிரேஷன் ஆபீசும், இருப்பதுடன் இங்கு ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டரும் இருக்கிறார்.

இந்த ஊர் ஒரு சுரோத்திரிய பூமியில் ஏற்பட்டிருக்கிறது. தெற்கிலுள்ள அநேகம் இதர நகரங்களுக்கும்

இதற்கும் வித்தியாசம் ஒன்றுமே இல்லை. மற்ற ஊர்களிலிருப்பது போலவே இங்கும் உத்தியோகம், மதம் இவைகளின் அம்சம் ஓங்கி யிருக்கக் காணலாம்.

இங்குள்ள கோவிலும் கூட இப்பொழுது அஃது இருக்கும் நிலைமை வாய்ந்தது, ஜாகீர் ஏற்பட்டதற்கு முந்தியே என்றது ஏற்படுகிறது. பிரதி அமாவாசை தினமும் சென்னையிலிருந்து அநேகம் ஜனங்கள் இந்தக் கோவிலுக்கு வருகிறார்கள். அநேகம் ஜனங்கள் அமாவாசையன்று தாங்கள் அங்குள்ள குளத்தில் முழுகி (படம் 7) ஜபதபங்களை முடித்துக் கொள்ளுகிறார்கள்.



(படம் 7)—திருவள்ளூர்க் குளம்.

இங்கு இரண்டு முக்கியமான உற்சவங்கள் பிரதி வருஷமும் நடைபெறும். ஒன்று பிரம்ஹ உற்சவம், அது தை அமாவாசை யன்று வரும்.

இரண்டாவது தெப்போற்சவம். இது ஆனி மாதத்தில் கொண்டாடப்படும். இப்பொழுது இங்குள்ள கோவில் முதல் முதல் ஒரு சிறிய கிராமத்துக் கோவிலாக இருந்தது. இதில் அம்மன்சன்னதி சுவாமிசன்னதி என்ற இரண்டு சன்னதிகள் அடங்கியிருந்தன. சுவாமியின் பெயர் வீரராகவப்பெருமாள்இவ்விடத்தில்ஜனங்கள் தலைமயிர் கழித்த லெனப்படும் முடிவாங்கலைச் செய்கிறார்கள். இது ஒரு பெருமாள் கோவில். இது 192-அடி நீளம் 156-அடி அகலமுள்ள மடத்து முற்றத்தில் அமைக்கப்பட்டிருக்கிறது. முன்புறத்துச் சுவரில் ஒரு கோபுரம் உண்டு. பின் இன்னொரு பிராகாரமும் ஏற்படுத்தப்பட்டது. அது 470-அடி சதுரமானது மன்றிச் சுவர்களில் இரண்டு கோபுரங்களுடன் கூடியதாயுமிருக்கிறது. பிறகு கொஞ்சகாலத்திற்கெல்லாம் 940-அடிநீளமும் 701-அடி அகலமும் பொருந்திய மூன்றாவது பிராகாரமும் ஏற்பட்டது. இந்த பிராகாரத்திற்கு ஐந்து கோபுரங்கள் ஏற்பட்டிருப்பதுமின்றி, இதில் அனேகம் புதிய கோவில்களும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. பிராகாரத்தில் ஒரு அழகான மண்டபமுமுளது.

திருவோற்றியூர் (Tiruvottiyur): இது சென்னைக்கு வடக்கே ஐந்து மைல் தூரத்திலுள்ளது. இதற்கு "ஆதிபுரி" என்றும் பெயர். இவ்வூரில் வடக்கிலிருந்த சூரிய வம்ச ராஜாவான மாந்தாதா வந்து லிங்கப்பிரதிஷ்டை செய்வித்தாராம். பட்டணத்துப்பிள்ளையா ரெனப்படும் திருவெண்காட்டடிகளது, சமாதிக்கோயில் இவ்விடத்தில்

இருக்கிறது. நாயன்மார்களில் ஒருவரான சுந்தர மூர்த்தி சங்கிலிநாச்சியாரைக் கலியாணம் செய்துகொண்ட ஸ்தலம் இதுவே.

இக்கோயிலிலுள்ள விமானம் மூன்று அந்தஸ்துடன் ராஜேந்திர சோழன் காலத்தில் சதுராநந பண்டிதரது உத்தரவின்பேரில் ரவி என்றும் வீரசோழ தக்ஷனெனவும் பெயர்கொண்ட சில்பியால் கட்டிவைக்கப் பட்டதாம். அப்போழுதே இதர ஸந்நிதிகள் ஏற்படுத்தப்பட்டன. இக்கோயிலுக்குள் ராஜேந்திர சோழன் மடம், குலோத் துங்கசோழன் மடம், திருஞானசம்பந்தன் மடம், நந்தி கேசுவர மடம் முதலியவைகளும் வியாகரணம் முதலிய கிரந்தங்களைப் படிக்கப் பல மண்டபங்களும் ஏற்பட்டன. இவ்வூர் ஆதிபுரீசுவரரே பாணிணி மஹரிஷிக்கு வியாகர ணத்தை உபதேசித்ததாக ஐதிஹ்யம்!

பல ராஜாக்கள் இவ்விடம் வந்து இக்கோயிலுக்கு ஏராளமாய்த் தானங்கள் செய்திருக்கிறார்கள். இரண் டாவது ராஜாதிராஜன் பங்குனி உத்திரத் திருநாளை இவ் விடத்தில் கொண்டாடினான். மூன்றுவது குலோதுங்கன், மூன்றுவது ராஜராஜன் இவர்கள் ஆனி உத்சவத்தை தரிசனம் செய்தார்கள். "ராஜேந்திர சோழன் திருநாளெ" னப்படும் உத்ஸவம் மார்கழி ஆருத்திரையில் நடக்கிறது.

துலுக்கர்கள் இவ்விடத்தில் செய்த உபத்திரவம்கூட இவ்விடம் கோயிலுள்ள ஒரு சிலாசாசனத்தில் தெரிவிக் கப் பட்டிருக்கிறது.



செங்கற்பட்டு ஜில்லா
ஸ்கேல் 1 அங்குலம் = 12 மைல்
தாம்பாக்கமலை
நாகலாபுர மலை
சத்தியவேடு
பழவேற்காடு
ஏரி
பொன்னேரி தாலூக்கா
பொன்னேரி
ஆரணி நதி
திருவள்ளூர் தாலூக்கா
கொசஸ்தலையாறு
புழலேரி
திருவொற்றியூர்
திருவள்ளூர்
அரக்கோணத்திலிருந்து
ஆவடி
சென்னபட்டணம்
சைதாப்பேட்டை
செம்பரம்பாக்கம் ஏரி
காஞ்சீபுரம தாலூக்கா



காஞ்சீபுரம் தாலூக்கா
காஞ்சீபுரம்
வாலாஜாபாத
பாலாறு
செய்யாறு
செங்கற்பட்டு
திருப்போரூர்
செங்கற்பட்டு
தாலூக்கா
திருக்கழுக்குன்றம்
பாலாறு
மதுராந்தகம்
மதுராந்தகம் தாலூக்கா
செய்யூர்
சூணம்பேடு
தென்ஆற்காடு ஜில்லா
12°
80°
3000 அடி
1200 அடி
600 அடி
கடல் மட்டம்
தாலூக்கா எல்லை
இருப்புப்பாதை
கால்வாய்
மலை